Regd: No. TN-MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone: 420212 6 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G 6-TN-Ms C. P. P 55



**உரிமை**

உரிமைப் போர் ஓர் உலராத ஊற்று. அதை அடைக்க முடியாது. அடக்குமுறைஅதனைப் பெரிதாக்குமே ஒழிய அடைத்து விடாது.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**ஒழுக்கம்**

நம்மிடம் ஒழுக்கம் இருக்கவேண்டும். ஒழுக்கமின்றி ஒருவன் இருப்பானேயானால் அது பிறரையும் பாதிக்கும்.

-தந்தை பெரியார்



மலர் : 9 சென்னை 8-3-1985 வெள்ளி ★ ★ ★ வெளியூர் 9-3-1985 சனி இதழ் 140

- ★ எம். ஜி. ஆர். பெற்ற வெற்றி நாட்டு மக்கள் அவர்மீது கொண்ட பாசத்தைக் காட்டுகிறது.
- ★ சிறந்த தூய நிர்வாகத்திற்கு எடுத்துக்காட்டு தமிழக அரசு
- ★ மத்திய நிதிக்குழு ஒதுக்கீடு ஏமாற்றமளிக்கிறது
- ★ இலங்கைத்தமிழர் பிரச்சினை தீர தமிழக அரசு அயரா முயற்சி அகதிகளுக்கு உதவி
- ★ நியாயவிலையில் மக்களுக்கு பொருள் கிடைக்க ரூ 90 கோடி
- ★ வேலைவாய்ப்புக்காக நிதியை முதலில் பயன்படுத்தியது தமிழகமே !
- ★ விவசாயிகள் கடனை திருப்பி செலுத்த புது சலுகை
- ★ **கல்பாக்கம் மின்சாரம்: மத்திய அரசு உறுதி**
- ★ **தொழில் துறையில் பெரும் வளர்ச்சி**
- ★ திருச்சியில் ரூ. 170 கோடியில் புதிய தொழிற்சாலை
- ★ சேலத்தில் முழு உருக்காலை அமைக்க மத்திய அரசுக்கு வலியுறுத்தல்
- ★ வேலைவாய்ப்பற்றோருக்கு ரூ. 5 கோடி உதவி
- ★ **ரூ. 149 கோடியில் குடிநீர் வழங்கும் திட்டம்**
- ★ **60 லட்சம் மெட்ரிக் டன் உணவு உற்பத்திக்கு திட்டம்**
- ★ **சுழல்முறை பாசனமுறை பற்றி ஆய்வு**
- ★ காவல்துறையினரின் சீருடை உதவித்தொகை உயர்வு உட்பட பல்வேறு நலத்திட்டங்கள்
- ★ அரசு ஊழியர்களுக்கு இடைக்கால நிவாரணத் தொகையில் பாதி மட்டுமே நிலுவையில் சரிகட்டப்படும்
- ★ **பள்ளிக்கட்டிடங்களை செப்பனிட திட்டம்**
- ★ **மருத்துவ பல்கலைக் கழகம் அமைப்பு**
- ★ பதுக்கல் - கள்ளச்சந்தையை ஒழிக்க கடும் நடவடிக்கை
- ★ கிராமப் பகுதிகள் அனைத்திற்கும் குடிநீர் சப்ளை

## ★ அரசு பணியாளர் குடும்ப நலநிதி ரூ. 10 ஆயிரத்தில் இருந்து 20 ஆயிரமாக உயர்வு

## வாழ்க்கையை உறுதியோடு - எதிர்காலத்தை நம்பிக்கையோடு

## சந்திக்க சரித்திரப் புகழ்பெற்ற முடிவு

# ரூ. 1000 கோடியில் அற்புத தொழிற்கல்வி திட்டம்

## 8-ம் வகுப்பு வரை தகுதியுள்ள எல்லா குழந்தைகளுக்கும்

# இலவச உடை - புத்தகம்

## சத்துணவு தந்த சரித்திர நாயகரின் சிந்தனைக்குச் செயல்வடிவம்

## தமிழகத்தை வாழவைக்க வான்மழை போல வந்த வள்ளலாம் புரட்சித்தலைவர் ஆட்சியின் சீர்மிகு திட்டங்கள்: ஆளுநர் குரானா அறிவிப்பு

**சென்னை, மார்ச் 8- தமிழக மக்களின் நம்பிக்கை நட்சத்திரமாம் - இணையற்ற பெருவள்ளல் - இனிய தலைவர் தமிழக முதல்வர் புரட்சித்தலைவரின் அரசின் அற்புதத் திட்டங்களை ஆளுநர் குரானா அறிவித்தார்.**

தமிழகத்தை வளம் கொழிக்கச் செய்ய, தமிழ் மக்களின் உள்ளத்திலும், இல்லத்திலும் ஒளிவீசச் செய்கிற புரட்சித்தலைவரின் ஒப்பற்ற 15 திட்டங்களையும் ஆளுநர் எடுத்துரைத்தார்.

வருகின்ற சந்ததியின் வாழ்க்கையில் வளமும், அமைதியும், நலமும் மலர்ந்தோங்க வகை செய்யும் தொலை நோக்குத் திட்டங்கள் அறிவிக்கப்பட்டு இருப்பது கண்டு நாடே மகிழ்ச்சியில் திளைக்கிறது,



வரலாற்றுச் சிறப்புமிக்க தமிழக சட்டப் பேரவை - மேலவையின் கூட்டுக் கூட்டம் இன்று (வெள்ளி) காலை 10 மணிக்குக் கூடியது.

மூன்றாம் பிறப்பெடுத்து முழு மதியாய், மூன்றாம் முறையாக ஆட்சியமைத்த தன்னிகரில்லாத் தலைவராம் புரட்சித்தலைவரின் சிந்தனைகளின் ஊற்றுக் கண்ணி லிருந்து பிறப்பெடுத்த ஜீவநதி போன்ற திட்டங்களை ஆளுநர் குரானா அறிவித்தார்.

தமிழ்நாடு சட்டசபை கூட்டுக் கூட்டத்தில் ஆளுநர் குரானா இன்று உரை நிகழ்த்தினார். கவர்னர் உரைவருமாறு:

புதிதாக அமைக்கப்பட்டுள்ள இச்சட்ட மன்றத்திற்கு வருகை தந்துள்ள உங்கள் அனைவரையும் வரவேற்பதில் நான் பெருமகிழ்ச்சியடைகிறேன். மக்கள் உங்களிடத்தில் மிகப்பெரும் நம்பிக்கையைத் திருக்கிறார்கள். அவர்களுடைய எண்ணங்கள் நிறைவேற நீங்கள்மேற்கொள்ளும் முயற்சிகளில் வெற்றிபெற வாழ்த்துகிறேன். திருமதி இந்திராகாந்தி அம்மையா ரின் கொடுமை மிகுந்த மரணத்தை முன்னிட்டு நாம் அனைவரும் மிகப் பெருங்கவலையில் ஆழ்ந்து கிடக்கையில், ஆளுகை அதிகாரத்தை சனநாயகமுறைகள் மூலம், அமைதியான முறையில் மாற்றிக்கொடுத்து நாட்டைப் பழைய நிலைக்கு மீட்டுக்கொணர்ந்துள்ள சூழ்நிலை, நமக்கெல்லாம் தன்னம்பிக்கையையும், ஊக்கத்தையும் அளிப்பதாக இருக்கின்றது. இயற்கையின் சோதனைகளிலிருந்து விடுபட்டு இந்தியா மீண்டும் தன்னுடைய முழுவலிவையும் நிலைநாட்டியிருப்பதோடு மட்டுமல்லாமல் இங்கு குடியாட்சி முறையானது மிக ஆழமாக வேரூன்றி நிற்கிறது என்



(2-ம் பக்கம் பார்க்க)

தேசிய ஒருமைப்பாட்டு சக்திகளுக்கு மக்கள் அளித்திருக்கும் வெற்றி

# பிரதமர் ராஜீவ்காந்திக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்து

சென்னை, மார்ச் 8-சட்டசபைத் தேர்தல்களில் இந்திரா காங்கிரஸ் பெற்ற மகத்தான வெற்றி தேசிய ஒருமைப்பாட்டு சக்திகளுக்கு மக்கள் அளித்திருக்கும் வெற்றி. இது மக்களை வறுமை, அறியாமையிலிருந்து உயர்த்தி பொருளாதார சமத்துவத்துக்குக் கொண்டு செல்லுமென குறிப்பிட்டு முதல்வர் புரட்சித்தலைவர் பிரதமர் ராஜீவிற்கு வாழ்த்துத் தந்தி அனுப்பியுள்ளார்.



முதல்வர் புரட்சித் தலைவர் பிரதமர் ராஜீவ் காந்திக்கு அனுப்பியுள்ள தந்தி விவரம் வருமாறு:

நடைபெற்ற சட்ட சபைத்தேர்தலில் உத்தரப் பிரதேசம், பீகார், இமாசலப்பிரதேசம், ராஜஸ்தான், குஜராத், மராட்டியம் ஒரிசா, மத்தியப்பிரதேசம் ஆகிய மாநிலங்களில் இந்திரா காங்கிரஸ் வெற்றி பெற்றதற்கு என் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நாட்டில் தூய்மையான நிர்வாகம் நடக்க வேண்டும் என்ற உங்களின் இடைவிடாத முயற்சிக்கும், உங்கள் கொள்கைகளுக்கும், உங்கள் மீது மக்கள் வைத்திருக்கும் நம்பிக்கையை இந்த மகத்தான வெற்றி மீண்டும் உறுதிப் படுத்துகிறது.

தேசிய ஒருமைப்பாட்டு சக்திகளுக்கு மக்கள் அளித்திருக்கும் ஓட்டு அவர்களை வறுமை, மற்றும் அறியாமையிலிருந்து உயர்த்தி பொருளாதார சமத்துவத்துக்கு கொண்டு செல்லும்.

உங்களுக்கு என் இதய பூர்வமான வாழ்த்துக்களை தெரிவிப்பதில் நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் தமது வாழ்த்துத் தந்தியில் கூறியுள்ளார்.

ஆளுநர் உரையில் நல்ல திட்டங்கள்:

## தமிழக அரசுக்கு எதிர்க்கட்சித் தலைவர் பாராட்டு

சென்னை, மார்ச். 8.- ஆளுநர் உரைக்கு எதிர்க்கட்சித் தலைவர் உ. சுப்பிரமணியம் பாராட்டு தெரிவித்தார்

தமிழக சட்டப்பேரவை மேலவை கூட்டுக் கூட்டத்தில் ஆளுநர் குரானா ஆற்றிய உரை பற்றி எதிர்க்கட்சி தலைவர் உ. சுப்பிரமணியம் கூறியதாவது:-

ஆளுநர் உரையில் இலங்கையிலிருந்து வரும் அகதிகள் பற்றி குறிப்பிட்டிருப்பதை வரவேற்கிறேன் இலங்கையிலிருந்து வரும் அகதிகளை தமிழகத்தில் மட்டுமல்லாமல் மற்ற மாநிலங்களுக்கும் அனுப்பி வைக்கவேண்டும்.

அவர்கள் ஆயிரக்கணக்கில் தமிழகத்திற்கு வந்து குவிகிறார்கள். நமது நிதி நிலமையையும் யோசித்து அவர்களை பிற மாநிலங்களுக்கு அனுப்பி வைக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

இதுபற்றி மத்திய அரசிடமும் எங்கள் கட்சி சார்பில் எடுத்துரையோம்.

இவ்வாறு உ.சுப்பிரமணியம் கூறினார்.

## குமரி அனந்தன்

ஆளுநர் உரைக்கு பாராட்டு தெரிவித்து காந்தி காமராஜ் தேசிய காங்கிரஸ் தலைவர் குமரி அனந்தன் கூறியதாவது:-

இந்த உரையில் மருத்துவ பல்கலைக்கழகம் தொடங்குவது குறித்து குறிப்பிட்டிருப்பதை பெரிதும் வரவேற்று பாராட்டுகிறேன்.

1 வது வகுப்பு முதல் 8 வது வகுப்பு வரையிலுள்ள ஏழை மாணவ மாணவிகளுக்கு இலவச சீருடை வழங்குவதாக அறிவிக்கப் பட்டுள்ளதும் பெரிதும் வரவேற்கத்தக்கது. மேலும் கைவினைஞர்கள், கட்டிட தொழிலாளர்கள்போன்ற உழைப்பாளிகள் உயிரிழந்தால் அவர்களுக்கு வழங்கப்படும் இழப்பீட்டு தொகை ஐயாயிரம் ரூபாயிலிருந்து 5 ஆயிரம் ரூபாயாக உயர்த்தியிருப்பது மிக நல்ல திட்டம் இது போன்ற நல்ல திட்டங்கள் உள்ள இந்த உரையை பெரிதும் வரவேற்றுப் பாராட்டுகிறேன்.

இவ்வாறு குமரி அனந்தன் கூறினார்.

# இலங்கைத் தமிழர் இன்னல் தீர தீவிரத் திட்டங்கள்

## ஆளுநர் உரை...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பதை உலகுக்குத் தெளிவுபடுத்திக் காட்டியும் விட்டது.

இம் மாநிலத்தில் பொதுத் தேர்தல்கள் மிக அமைதியான முறையில் நடந்தேறியிருக்கின்றன. பெருவாரியான மக்களும் முன் வந்து தங்கள் வாக்குரிமையை முறைப்படி பயன்படுத்தியுள்ளனர். மக்கள் வழங்கிய மாபெரும் தீர்ப்பை இந்த அரசு பெற்றிருக்கிறது என்றால், அதற்குக் காரணம், அரசு மேற்கொண்ட பல்வேறு கொள்கைகளின்பால், மக்கள் கொண்டிருக்கும் உறுதியான ஆதரவும் மறுபடியும் நிலைநாட்டும் நம்பிக்கையும் ஆகும்.

## புரட்சித்தலைவர் மீது மக்கள் நம்பிக்கை

மக்கள் அளித்துள்ள தீர்ப்பு, அரசின் கொள்கைகளிடத்தே மட்டுமல்லாமல் டாக்டர் எம்.ஜி.இராமச்சந்திரன் அவர்களின் தலைமையிடத்திலும் மக்கள் எவ்வளவு நம்பிக்கையைக் கொண்டிருக்கிறார்கள் என்பதை மீண்டும் நிலைநாட்டும் தன்மையதாகும். பேரன்பையும், அளப்பரிய பெரும் பற்றையும் பெற்ற பொதுமக்களுக்குத் தொண்டு புரியத் தம்மை மறுபடியும் ஒப்படைக்கின்ற தன்மையோடும், உடல்நலத்தோடும் திரும்பி வந்த முதலமைச்சரை, இந்த மாநிலம் முழுவதுமே விழாக் கோலத்தோடு, பெருமகிழ்ச்சியுடன் வரவேற்று நின்றது.

ஏழை எளிய மக்களின் முன்னேற்றத்திற்கும், தாழ்த்தப்பட்டோரின் துயரங்களைத் துடைப்பதற்கும், வறுமையையும்வேலையின்மையையும்நீக்குவதற்கும், இந்த அரசு எடுத்துக் கொண்ட உறுதி மொழியைத் தொடர்ந்து நிறைவேற்றுவதற்குபாடுபடும்என்பதை இந்த வாய்ப்பிலே நான் மீண்டும் வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். தூய்மையும் திறமையும் வாய்ந்த நிருவாகத்தை அளிக்க வேண்டும் என்பதில் இந்த அரசு முனைப்புள்ளத்தோடு இருந்து வருகிறது. இந்த நோக்கங்களெல்லாம் சிறப்புற நிறைவேற நீங்கள் அனைவரும் உங்களுடைய ஆதரவைத் தீவிரமாக அளிக்குமாறு கேட்டுக்கொள்கிறேன்.

இந் நாட்டைப் பொருத்தவரையில், 1985 ஆம் ஆண்டு குறிப்பிடத்தக்க முக்கியத்துவம் வாய்நத ஆண்டாகும். இந்த நாட்டின் மாபெரும் சக்தியாக, மிகப்பெருந்தலைவியாக விளங்கிய திருமதி இந்திரா காந்தி அம்மையாரின் மறைவுக்குப்பின்னர்மத்தியில் அமைதியாக ஆட்சி மாற்றம் கண்டது இந்தஆண்டு தான். ஏழாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப்பட்டு வருகின்ற இந்த நேரத்தில் இந்தப்பெரிய நாட்டின் பிரதமர் பொறுப்பை, திரு. இராஜீவ்காந்தி அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கிறார். விரைந்து முன்னேறும் கால கட்டத்தை நோக்கி இந்த நாடு நடைபோட்டுக் கொண்டிருக்கிறது. நாட்டின் உற்பத்தியைப் பெருக்கவும், நிர்வாகத்தைத் தூய்மைப்படுத்தவும் மத்திய அரசு மேற்கொண்டுள்ள முயற்சிகளுக்கு நாம் நம்முடைய மனநிறைவான ஆதரவைத் தெரிவித்துக் கொள்கிறோம். இருபது அம்ச திட்டத்தைச் செயல்படுத்துவதில் தமிழ்நாடு அரசு மத்திய அரசுக்கு தன் முழுமையான ஒத்துழைப்பை கொடுத்துக் கொண்டு வருகிறது. வறுமை ஒழிப்புத் திட்டங்களைச் செயற்படுத்துவதில் நாம் என்றும் எந்த வகையிலும் பின்னடைந்து விடவில்லை.

தற்போது மக்களின் விருப்பங்கள் பெருகிய வண்ணம் இருக்கின்றன. அதே நேரத்தில் அவற்றை நிறைவேற்ற வேண்டிய பொறுப்புகளும் அரசுக்கு மேலும் கூடிக்கொண்டே இருக்கின்றன. நிதி ஆதாரங்கள் கிடைப்பதில் ஏற்படும் சற்றுங் குறையாத தடைகள் பலவற்றை நாம் சந்திக்க வேண்டி இருக்கிறது. எட்டாவது நிதிக் குழுவின் பரிந்துரைகள், உண்மையில் தமிழ்நாட்டின் நிதிக் கோரிக்கைகளுக்கு முழு நியாயம் வழங்கவில்லை. இதனால் திறமையான நிதி நிர்வாகத்திற்கு பெயர் பெற்ற தமிழ்நாடு போன்ற மாநிலங்கள் அதிக நிதி உதவி பெறுவதற்குப் பதிலாக, மிகவும் குறைந்த நிதி உதவி மட்டுமே பெற்றுப் பெரிதும் ஏமாற்றமடைய நேரிட்டது. நிதி ஆதாரங்களில் மட்டுமல்லாமல் நிதி திரட்டுவதிலும் பின்தங்கியுள்ள மாநிலங்களுக்கு உதவுவதையே நிதிக்குழு தன்பரிந்துரைகளின் அழுத்தந்திருத்தமான நோக்கமாகக் கொண்டிருந்தது. திட்டத்தின் மூலமாகப் போதிய நிதி உதவி வழங்குவதன் வாயிலாக இந்த இழப்பு ஈடு செய்யப்படும் என நாம் எதிர்பார்க்கிறோம். இது வரையில் திட்ட நிதி உதவி அளிப்பதில் பின்பற்றிய முறையை விட இனி நியாயமான அளவிலும் சரியான அடிப்படையிலும் திட்ட நிதி உதவி கிடைப்பதற்கான முறையைப் பின்பற்ற வேண்டும் என்ற அடிப்படையில் தான் தமிழ்நாடு திட்ட நிதி உதவி கோரியுள்ளது.

## நிதி உதவி குறையக்கூடாது

நிதி உதவி ஏற்பாடுகளில் தேசிய வளர்ச்சி மன்றம் உட்பட பல்வேறு மன்றங்களில் இப்படிப்பட்ட மாற்றம் ஏற்பட வேண்டுமென்று இம் மாநில அரசு வாதிட்டு வந்துள்ளது. மாநிலங்கள் வரி வாயில்களையொட்டி, வரி திரட்டும் முயற்சிகளைக்கருத்தில் கொண்டு, நிதிப்பங்கீட்டு அளவு அமைய வேண்டுமென்றும் குடும்ப நலத்திட்டத் துறையில் சிறந்த சாதனை புரிந்துவரும் மாநிலங்களுக்கு அளிக்கப்படும் நிதி உதவி எக்காரணங்கொண்டும் குறைந்துவிடும் நிலை ஏற்படக்கூடாது என்றும் இவற்றுக்கேற்றவகையில் மத்திய நிதிப் பங்கீட்டு ஏற்பாடு அமைய வேண்டுமென்றும் நாம் கருதுகிறோம். மக்கள் தொகை அடிப்படையில் நிதியுதவிகளை நிர்ணயிக்கும்போது, 1971-ம் ஆண்டு மாநிலங்களில் நிலவிய மக்கள் தொகையைத் தான் அடிப்படையாகக் கொள்ளவேண்டுமென மைய அரசு எடுத்துள்ள சரியான முடிவு. நபர்வாரி வருமானத்தை வைத்து நிர்ணயிக்கும் நிதி உதவிகளுக்கும் பொருந்துமாறு செய்யவேண்டும்,

## முரண்பாடு நீங்க வேண்டும்

குடும்ப நலத் திட்டத்தின் காரணமாக மக்கள் தொகை வளர்ச்சி குறைந்து நபர்வாரி வருமானம் உயர்ந்துள்ள மாநிலங்கள் குறைந்த நிதி உதவி பெறுகின்ற நிலை உருவாகக் கூடாது. திட்ட நிதியுதவியையும் பொதுமக்கள், வங்கிகள் ஆகியோரிடமிருந்து திரட்டப்படும் கடன்களையும் நடுநிலையான அடிப்படையில் பங்கிட்டுக் கொள்ளும் நிதி ஏற்பாட்டின் மூலமாக, ஏழாவது திட்டப் பணிகளை மேற்கொள்வதற்கான போதிய நிதி ஆதாரம் நமக்கு கிடைக்கும் என நம்புவதோடு அதன் மூலம் பல்வேறு துறைகளில் மேம்பாட்டுத் தேவைகளை நிறைவேற்ற முடியும் என்று நான் கருதுகிறேன். இத்தகைய நிதி பங்கீட்டு ஏற்பாட்டு முறையினால் நபர்வாரி அடிப்படையில் ஆறாவது திட்டக் காலத்தில் மற்ற மாநிலங்களை விட இம் மாநிலத்திற்கு மிகக் குறைந்தநிதி உதவி கிடைக்கப் பெற்ற முரண்பாடான நிலைநீங்குமென்று நாம் எதிர்பார்க்கிறோம்.

## இலங்கைத்தமிழர்இன்னல்தீரநடவடிக்கை

இலங்கையில் தமிழர்கள் மீது கட்டவிழ்த்துவிடப் பட்டுள்ள படுபயங்கரமான வன்முறை தாக்குதல்கள் இந்தியர்களிடையே, குறிப்பாக, தமிழ்நாட்டு மக்களிடையே பெருந்துயரை ஏற்படுத்தியுள்ளன. இதற்கு விரைவில் அரசியல்வழி தீர்வு காண வேண்டுமென்று இந்தியப் பேரரசிடம் தமிழ்நாடு அரசு பலமுறை எடுத்துக் கூறி வந்துள்ளது. தமிழ்நாட்டு மக்கள் சார்பில் முதலமைச்சர் அவர்கள் இந்தியப் பேரரசுக்கு வேண்டுகோள் விடுத்து. இலங்கையில் தமிழர்களை மனிதாபிமானமற்ற முறையிலும், கண் மூடித்தனமாகவும் தாக்கி வருவதை அறவே நிறுத்துமாறு இலங்கை அரசை இந்தியப் பேரரசு வற்புறுத்த வேண்டுமென்று வலியுறுத்தி வந்துள்ளார்.

இராமேசுவரம் கடற்கரையில் அமைதியாகவும் நிராயுதபாணியாகவும் மீன் பிடித்து வரும் தமிழக மீனவர்கள் மீது இலங்கை தொடர்ந்து தாக்குதல் நடத்தி வருவதும் மீனவர் சிலரைச் சுட்டு கொன்றதும் தமிழ்நாட்டு மக்களிடையே கடும் எதிர்ப்பையும் கொந்தளிப்பையும் ஏற்படுத்தியுள்ளன. தமிழ்நாட்டு மீனவர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும்வகையில், மத்தியஅரசுபாதுகாவல்படையை வலுப்படுத்தி இருப்பதோடுகப்பல்படையைச்சார்ந்த ரோந்துப் படகுகளையும் அனுப்பி வைத்துள்ளது. இலங்கைத் தமிழர்களின் பிரச்சினைக்குத் தீர்வு காண இராஜ தந்திர வழிகளில் மத்திய அரசு எடுத்துள்ள நடவடிக்கைகளும், புதியப் பிரதமர் மேற்கொண்டுள்ள முயற்சிகளும் இப்பிரச்சினைக்கு நிலையான தீர்வுகாண வழி வகுக்கும் என்று நாம் நம்பிக்கை கொண்டுள்ளோம்.

இலங்கைத் தமிழர்கள்மீது கட்டவிழ்த்துவிடப்பட்ட வன்முறைத் தாக்குதல்களைத் தொடர்ந்து அகதிகளின் வருகைபெருகிக் கொண்டே இருக்கிறது. இனி எதிர்காலத்தில் இந்த வருகை மேலும் தீவிரமாகக் கூடும்,இந்தப் பிரச்சினை நமக்கு மிகுந்த கவலையை அளிக்கிறது. அகதிகளின் முகாம்களில் அடிப்படைத் தேவைக்கான வசதிகளை அதிகப் படுத்த தமிழ்நாடு அரசு தக்க நடவடிக்கைகளை எடுத்து வருகிறது. மகளிர் குழந்தைகள் உட்பட அகதிகள் பெரும்பாலானோர் மீனவர் சமுதாயத்தைச் சேர்ந்தவர்களாக இருக்கின்றனர். அவர்கள் நாட்டுப் படகுகளிலும் நீராவிப் படகுகளிலும் இராமேசுவரம் கடற்கரைப் பகுதிகளை நோக்கி வந்த வண்ணம் இருக்கின்றனர். [5—2—1985 விருந்து 4—3—1985 வரையிலான குறுகிய கால அளவில், 12,938 நபர்களைக்கொண்ட 3,023 அகதிக் குடும்பங்கள் இராமேசுவரம் மற்றும் வேதாரண்யம் வந்தடைந்துள்ளனர். இராமநாதபுரம் மாவட்ட ஆட்சித் தலைவர், அவர்களை வரவேற்றும், மண்டபம் முகாமில் தற்காலிக வீடுகள் கட்டி கொடுத்து அவர்களுக்கு வசதியளித்தும்,சில குடும்பங்களை ஏனைய மாவட்டங்களுக்கு அனுப்பி வைத்தும் பல்வேறு நடவடிக்கைகளை ஏற்கனவே எடுத்துள்ளார். இராமநாதபுரம் மாவட்ட ஆட்சித்தலைவரின் ஒத்துழைப்போடு, அவசரகாலநடவடிக்கைமுறையில்அனைத்து வகை ஏற்பாடுகளையும் செய்து கொடுக்குமாறு மற்ற மாவட்ட ஆட்சித் தலைவர்களும் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளனர். இலங்கையிலிருந்து வந்து கொண்டிருக்கும் ஆதரவற்ற தமிழர்களின் துயர் துடைப்புப் பணிகளை ஒருங்கிணைத்து விரைவுபடுத்தி நிறைவேற்றுவதற்காக இலங்கை அகதிகள் மறுவாழ்வு ஆணையர் நியமிக்கப்பட்டு இருக்கிறார்.

வரும் ஆண்டில் அரசு நிறைவேற்றக் கருதியுள்ள திட்டங்கள் பணிகள் சிலவற்றைப் பற்றிய செய்திகள் உங்கள் முன் வைப்பதற்கு முன் சென்ற ஆண்டில் அரசு எய்திய சாதனைகள் சிலவற்றின் சிறப்புக்கள் குறித்து சுருக்கமாக கூற விரும்புகிறேன்.

## வேலை வாய்ப்பு: தமிழகம் முதலிடம்

ஏற்கெனவே குறிப்பிட்டுள்ளதைப் போல வறுமையை ஒழிப்பதற்காக மத்திய அரசு வகுத்துள்ள திட்டங்கள் பலவும் சென்ற ஆண்டில், மிகத் தீவிரமாகச் செயற்படுத்தப்பட்டன. ஊரக நிலமற்றோர் வேலை வாய்ப்புறுதித் திட்டத்தின் கீழ், மத்திய அரசு, நடப்பு ஆண்டிற்காக இம் மாநிலத்திற்கு ஒதுக்கிய தொகையை முழுமையாக வழங்குவதற்கு முன்னரே, இலக்கிடப்பட்ட தொகையான ரூ.44.50 கோடியை இந்தியாவிலேயே முதலாவதாகச் செலவிட்ட மாநிலம், நமது மாநிலமாகும். மேலும், மேற்குறிப்பிட்ட திட்டத்திற்காக மத்திய அரசு கூடுதலாக எவ்வளவு நிதியை வழங்கக் கருதினாலும் அத்தொகையை ஏற்றுக்கொள்ள தயாராக இருப்பதாக இம்மாநில அரசு தெரிவித்துள்ளது. இத்திட்டம், தேசிய கிராமப் பகுதி வேலைவாய்ப்புத் திட்டத்துடன் இணைந்து கிராமப் பகுதிகளில் வேலைவாய்ப்புப் பரவலாக ஏற்படுத்துவதற்கான அடிப்படையை அமைத்துள்ளதோடு, கிராமப் பகுதிகளில் நிலையான சொத்துக்கள், மிகவும் இன்றியமையாத அடிப்படை வசதிகள் ஆகியவை இம் மாநில அரசு மூலம் ஏற்படவும் வழி வகுத்தது.

கிராமமக்கள் குறைந்த வருமானத் தொகுதியினர் ஆகியோர் நலன் கருதி கடந்த ஆண்டில் அரசு பல்வேறு திட்டங்களை அறிவித்து அவற்றை நடைமுறைப்படுத்தியுள்ளது. முன்பு இருந்ததைப் போல் ஒவ்வொரு மாவட்டத்திற்கும் உச்சவரம்பு என்று எந்த அளவையும் நிர்ணயம் செய்யாமல், இம் மாநிலத்தில் தகுதி வாய்ந்த நபர்கள் அனைவருக்கும் முதியோர் ஓய்வூதியம் வழங்கும் திட்டம் கொண்டுவரப்பட்டுள்ளது. இதன் மூலம் கூடுதலாக 81,273 முதியோர் பயனடைவர் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

## வெற்றிகரமாக செயல்படும் புரட்சித் தலைவர் திட்டம்

மேலும், தற்போது இம் மாநிலத்தில் முதியோர் ஓய்வூதியம் பெறுபவர்களின் மொத்த எண்ணிக்கை 2,80,488 ஆகும். ஓய்வூதியம் பெற விண்ணப்பிக்கத் தகுதியுடையோர் அனைவரும் அதனை காலத் தாழ்வுக்கு இடமில்லாமல் உடனடியாகப் பெற வேண்டுமென்பதே அரசின் நோக்கமாகும். ஆதரவற்ற குழந்தைகள் அனைவருக்கும் வசதிகளை விரிவுபடுத்தும் வகையில் இம்மாநிலம் முழுவதிலும் சுமார் ரூ. 44.28 இலட்சம் செலவில் 16 புதிய ஆதரவற்றோர் இல்லங்கள் ஏற்படுத்த அரசு அனுமதி வழங்கியது. காது கேளாத 15,000 பேருக்கு செவிமடுப்புக் கருவிகள் வழங்கவும் முடிவு செய்து, அதற்காக ஊராட்சி ஒன்றிய வாரியாக கணக்கெடுப்பு குழுக்கள் நியமிக்கப்பட்டுள்ளன. கிராமப்பகுதிகளில் குறிப்பாக பெண்களுக்குக் கழிப்பிடம் போன்ற துப்புரவு வசதிகளைச் செய்து கொடுக்க முதலமைச்சர் அவர்கள் அறிவித்த திட்டம் வெற்றிகரமாகச் செயற்படுத்தப்பட்டு வருகிறது. 11,200 கிராமங்களில் இத்திட்டம் ஏற்கெனவே செயற்படுத்தப் பட்டுவிட்டது. வருமாண்டிலும் இத் திட்டம் தொடர்ந்து செயற்படுத்தப்படும்.

பொது விநியோக ஏற்பாட்டின் மூலம் வழங்கப் படுகின்ற அரிசியின் உச்சவரம்பு அளவை மீண்டும் குடும்பம் ஒன்றுக்கு 20 கிலோவாக அரசு உயர்த்தியுள்ளது. சுமார் 600 குடும்ப அட்டைகளுக்கு ஒரு கடை என்கிற வீதத்தில் 20,000க்கும் மேற்பட்ட நியாய விலைக் கடைகளின் மூலம் திங்களொன்றுக்கு 80,000 டன் அரிசி விநியோகம் செய்து பொது விநியோக முறையை மிகச் சிறப்பாக நடத்திவரும் பொறுப்பினை அரசு மேற்கொண்டுள்ளது. பொது விநியோக முறையில் சலுகைகள் அளித்தல், அதன் நிர்வாகச் செலவுகளை ஏற்றல் போன்ற வகையில் சுமார் ரூ- 90 கோடி அளவுக்கு செலவினை அரசு ஏற்றுக் கொண்டுள்ளது.

## பெரிய மாவட்டங்கள் பிரிக்கப்படும்

நிர்வாகத் திறனை உயர்த்தும் நோக்குடனும், நிர்வாகத்தை மக்களுக்கு நெருக்கமாகக் கொண்டு வரும் நோக்குடனும் தற்போதுள்ள பெரிய மாவட்டங்கள் சிலவற்றைச் சிறிய மாவட்டங்களாகப் பிரிக்க அரசு முடிவு எடுத்ததை என்னுடைய கடந்த உரையின் போதுநான் குறிப்பிட்டிருந்தேன். முதல் கட்டமாக, இராமநாதபுரம் மாவட்டத்தை இராமநாதபுரம்மாவட்டம், காமராஜர்மாவட்டம், பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் எனப் பிரிக்க ஏற்கனவே ஆணைகள் பிறப்பிக்கப் பட்டுள்ளன என்ற விவரத்தை இந்த அவையில்

4-ம் பக்கம் பார்க்க

★ தி. மு. க.வை வெற்றிபெறச் செய்வதற்காக நடந்த பலேமோசடி

கழக ஓட்டுகளை தி.மு.க.வுக்கு சாதகமாக்க முயன்ற

# அதிகாரியின் மீது நடவடிக்கை எடுப்பீர்

## தலைமைத்தேர்தல் அதிகாரிக்கு பொதுசெயலாளர் ப. உ. ச. தந்தி

சென்னை. மார்ச் 8- தி. மு. க.வை வெற்றி பெறச் செய்வதற்காக கழகத்திற்கு விழுந்த இரட்டைஇலை ஓட்டுகளை தி. மு. க. ஓட்டுகளாக மாற்ற முயற்சி நடந்தது. அந்த முயற்சியை கழகத் தோழர்கள் முறியடித்தனர். சம்பந்தப்பட்ட அதிகாரியின் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும் என்று தலைமை தேர்தல் அதிகாரிக்கு பொதுச்செயலாளர் ப. உ. ச. தந்தி அனுப்பியுள்ளார்.

பாண்டிச்சேரியில் கழகமும், இ. காங்கிரசும் பெற்றுள்ள வெற்றி சாதாரண வெற்றியல்ல. தில்லுமுல்லுகள் பலவற்றைத் தூள் தூளாக்கி வெற்றி கண்டுள்ளோம்.

ஆம்! தி. மு. க, வை வெற்றி பெறச் செய்துவிட வேண்டும் என்பதற்காக அத்தனை மோசடிகள் நடந்துள்ளன மக்களால் தூக்கி வீசப்பட்ட தி. மு. க.வுக்குத் தோள் கொடுக்க முயன்ற கும்பலில் ஓட்டு எண்ணிக்கை அதிகாரிகளும் இடம் பெற்றிருக்கிறார்கள் என்னும் நெஞ்சம் பதைக்கும்செய்தி கிடைத்துள்ளது.

### மக்கள் ஆதரவை மறைக்க நடந்த சதி

ஏம்பலம் தொகுதியில் கழக வேட்பாளர் அன்பழகனுக்கு மக்கள் மகத்தான ஆதரவு அளித்தும் அதை மறைக்க சதி நடந்தது.

ஓட்டு எண்ணும் போது ஒவ்வொரு கட்சிக்கும் கிடைத்த ஓட்டுகள் ஐம்பது ஐம்பதாக தனித் தனியே கட்டி வைத்து எண்ணப்படும்.

இரட்டை இலை சின்னத்தில் முத்திரையிடப்பட்ட 49 ஓட்டுக்கு மேல் ஒரு உதயசூரியன் ஓட்டை வைத்து கட்டிவிடுகிறார்கள். எண்ணும்போது அவை அனைத்தையும் தி.மு.கஓட்டாக எண்ணிவிட மோசடிநடந்தது.

ஏம்பலம்தொகுதி ஓட்டுகளை எண்ணும் போது இப்படிமோசடி நடந்தது கண்டுபிடிக்கப்பட்டது.

கழக வேட்பாளர் அன்பழகன் வெற்றி பெற்றுள்ளார்.

கழக ஓட்டுக்களை தி.மு.க. ஓட்டுக்களாக மாற்ற நடந்த முயற்சி குறித்து தலைமைத் தேர்தல் அதிகாரி திரிவேதிக்கு பொதுச் செயலாளர் ப. உ. ச. தந்தி அனுப்பியுள்ளார்.

அதில் கூறி இருப்பதாவது:—

பாண்டிச்சேரி யூனியன் பிரதேசத்தில் ஏம்பலம் தொகுதியில் இருந்து எங்கள் கட்சி வேட்பாளர் அன்பழகன் வெற்றிபெற்றுள்ளார்,

### மோசடிகள் பாரீர்

அந்தத் தொகுதியில் ஓட்டு எண்ணிய அதிகாரிகள், 49 இரட்டைஇலை ஓட்டுகளை எடுத்து அதன் மேல் ஒரு உதயசூரியன் ஓட்டை வைத்துக் கட்டி அவை அனைத்தும் தி.மு.க. ஓட்டு என்பது போல் எண்ணுவதற்கு ரகசியஏற்பாடு செய்துள்ளனர்.

இப்படிப்பட்ட மோசடியில் ஈடுபட்ட அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்க வேண்டுகிறேன்.

இவ்வாறு பொதுச் செயலாளர் ப. உ. ச. அந்தத் தந்தியில் கூறியுள்ளார்.

---

தமிழகம், ஆந்திரா, கருநாடகம் இடையே

நல்லுறவு நீடிக்குமென நம்பிக்கை:

## என். டி. ஆர்., ஹெக்டேவுக்கு புரட்சித்தலைவர் வாழ்த்து

ஆந்திர மாநில முதலமைச்சர் என். டி. ராமராவும், கருநாடக மாநில முதல்வர் ராமகிருஷ்ண ஹெக்டேயும் மாநில சட்டமன்றப் பேரவைத் தேர்தலில் அடைந்துள்ள வெற்றிக்குப் பாராட்டு தெரிவித்து அவர்களுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்துச் செய்தி அனுப்பியுள்ளார். அதில் தமிழகத்துக்கும், ஆந்திர மற்றும் கருநாடக மாநிலங்களுக்கும் இடையே நிலவிவரும் நல்லுறவு மேலும் நல்ல முறையில் நீடிக்கும் என்ற தமது நம்பிக்கையைத் தெரிவித்திருக்கிறார்.

---

6ம் பத்தி தொடர்ச்சி

தாய்மார்களைக் கற்பழிப்பதும், ஆண் பிள்ளைகளை 'நீங்கள் தானா விடுதலைப் புலிகள்?' என்று சுட்டு ஒழிப்பதும் பெண்கள் கொலை செய்யப்படுவதும் தமிழர்களின்சொத்துக்கள் சூறையாடப்படுவதும் அன்றாடம் நடைபெறுகின்ற நடைமுறை செயல்களாக ஆகிவிட்டன.

பிப்ரவரி 5 ஆம் தேதி முதல் இதுவரை 16,000 பேர் அகதிகளாகதமிழகம் வந்துள்ளனர். இன்னும் ஒருலட்சம் பேருக்கு மேல் வருவார்கள் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

புரட்சித்தலைவர் அவர்கள் இது குறித்து பாரதப் பிரதமர் ராஜீவ்காந்திக்கு கடிதம் எழுதியுள்ளார். தந்தியும் கொடுத்துள்ளார்.

### பிரதமர் சந்திப்பு

பிரதமர் சென்னை வந்திருந்த பொழுது நள்ளிரவையும் பொருட்படுத்தாமல் நமது முதல்வர் பிரதமர் அவர்களை சந்தித்து இலங்கைப் பிரச்சினை குறித்து விரைவான நடவடிக்கையைமேற்கொள்ள வேண்டுமென வற்புறுத்தி உள்ளார்.

இலங்கைத் தமிழர் பிரச்சினைக்கு ஒரு சுமுகமான அரசியல் தீர்வு காணவேண்டுமென இந்திய அரசு எவ்வளவோ முயற்சித்தாலும் இலங்கை அரசு அரசியல் தீர்வுக்கு பதிலாக இராணுவத் தீர்வையே விரும்புவதாகத் தெரிகிறது.

### அரசியல் தீர்வு

முதற்கட்டமாக, அரசியல் தீர்வு காண்பதில் இலங்கை அரசுக்கு உண்மையிலேயே அக்கறை இருக்குமானால் தமிழர்கள் வாழும் பகுதியிலிருந்து மிருகங்களைப் போல் நடந்துகொள்ளும் சிங்கள இராணுவத்தினரை உடனடியாகதிரும்பப் பெற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும். 'எரிவதை இழுத்தால் கொதிப்பது நின்று விடும்' என்பார்கள். அதைப் போல் சிங்கள இராணுவம் தமிழ்ப் பகுதிகளில் இருந்து வெளியேற்றப்படுமேயானால் தமிழர்கள் படுகிற அவதிகள் குறையும். இந்தியாவை நோக்கி வரும் தமிழர்கள் பிரச்சினையும் உடனடியாகத் தீரும். இது குறித்து இலங்கை அரசை வற்புறுத்த இந்திய அரசு முன்வரவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

---

## தன்னை சந்திக்க விரும்பிய பக்தவத்சலத்தை தானே சென்று சந்தித்தார் புரட்சித்தலைவர்

சென்னை, மார்ச் 8- தன்னை சந்திக்க விரும்பிய பெரியவர் பக்தவத்சலத்தைமுதல்வர்புரட்சித் தலைவரே நேரடியாக அவரது இல்லம் சென்று சந்தித்துப் பேசினார்.

அமெரிக்காவில்சிகிச்சை பெற்று திரும்பிய முதல்வர் புரட்சித் தலைவரை ராமாவரம் தோட்டத்திலுள்ள அவருடைய வீட்டில் சந்தித்துப் பேச பெரியவர் பக்தவத்சலம் விரும்பினார். அதன் படி எப்போது சந்தித்து பேச வசதியாகஇருக்கும் என்று பெரியவர் பக்தவத்சலம் கேட்டிருந்தார்.

இதைக் கேள்வியுற்ற முதல்வர்புரட்சித் தலைவர் பெரியவர்பக்தவத்சலத்தை சிரமத்துக்கு ஆளாக்கக் கூடாது என்று எண்ணி முதல்வர் புரட்சித் தலைவரே நேற்றுபகல்12 மணி அளவில் பெரியவர் பக்தவத்சலம் இல்லம் சென்றார். அங்கு அவருடன் 15 நிமிடங்கள் பேசிவிட்டு பின்னர் பெரியவர் பக்தவத்சலத்திடம் விடை பெற்றுச் சென்றார்.

---

ஸ்ரீஹரிகோட்டா ராக்கெட் தளத்திற்கு

### ஆன்டெனா கோபுரம்: டான்சிக்கு ஆர்டர்

சென்னை, மார்ச் 8— ஸ்ரீஹரி கோட்டா ராக்கெட் தளத்தில், இரண்டு பிரமாண்டமான ஆன்டெனா கோபுரங்களை கட்டுவதற்கான ஆர்டர்களை தமிழ்நாடு சிறு தொழில் கார்ப்பரேஷன் (டான்சி) பெற்றுள்ளது.

18 லட்சத்து 40 ஆயிரம் ரூபாய் மதிப்பீட்டில் இந்தக் கோபுரங்கள் வடிவமைக்கப்படும்.

இதே போல் திருவனந்தபுரம் விக்ரம்சாராபாய் விண்வெளி ஆய்வு நிலையத்திற்கும், 9 லட்சத்து 60 ஆயிரம் ரூபாய் மதிப்பிற்கான மற்றொரு ஆர்டரையும் பெற்றுள்ளது.

---

தமிழர் வாழும் பகுதிகளிலிருந்து

## சிங்கள ராணுவத்தை இலங்கை அரசு வாபஸ் பெற வேண்டும்

அமைச்சர் பண்ருட்டியார் யோசனை

சென்னை, மார்ச் 8- இலங்கையில் தமிழர்கள் வாழும் பகுதிகளிலிருந்து சிங்கள ராணுவம் வாபஸ் ஆனால், கலவரம் அடங்கும் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் யோசனை தெரிவித்துள்ளார்.

மின்சாரத்துறைஅமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரனுக்கு திண்டிவனத்தில்பாராட்டு விழா நடநதது.

விழாவில் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசுகையில்கூறியதாவது:

வரலாற்று நாயகர் புரட்சித்தலைவரை நம்பி வாக்களித்த தமிழக மக்களுக்கு அதிலும் குறிப்பாக தாய்மார்களுக்கும் இளைஞர்களுக்கும் எவ்வளவு நறபணிகள் ஆற்றமுடியுமோஅவ்வளவு நற்பணிகளை ஆற்ற வேண்டும் என்ற உறுதியோடு கண்ணும் கருத்துமாக இருந்து சிந்தித்து வருகிறார் புரட்சித் தலைவர்.

### பாதுகாப்பு

அவருக்கு இன்றைக்கு இருக்கிற ஒரே கவலை இலங்கைத் தமிழர்களின் அவல நிலை குறித்ததே ஆகும். உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பு அளிக்க வேண்டிய இலங்கை இராணுவம் தமிழர்கள் வாழும் பகுதிகளில் கொள்ளைக் கூட்டம் போல் புகுந்து தமிழ் மக்களைத் தொல்லைக்கு உள்ளாக்கி வருகின்றனர். தமிழர் வாழும் பகுதிகளில் முற்றுகையிடுவதும், வீட்டிற்குள் நுழைவதும் முதியோர்க்களை கட்டி வைத்து அடிப்பதும் அவர்கள் கண் முன்னால்

1-ம பத்தி பார்க்க

---

திருப்பத்தூர், புதுவை

### வாக்காளர்கட்கு பழனியாண்டி நன்றி

சென்னை, மார்ச் 8- திருப்பத்தூர் சட்டசபை இடைத் தேர்தலிலும், புதுவை சட்டசபை தேர்தலிலும் கழக- காங்கிரஸ் ஜனநாயக முற்போக்கு கூட்டணி வேட்பாளர்களின் வெற்றிக்குப் பாடுபட்ட செயல் வீரர்களுக்கும் வாக்காள பெருமக்களுக்கும் தன் நன்றியை தெரிவித்துக் கொள்வதாக தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் தலைவர் பழனியாண்டி ஒரு அறிக்கையில் கூறியுள்ளார்.

---

### இமாசல பிரதேசம்: வீர்பத்ரசிங் முதல்வர்

சிம்லா, மார்ச் 8— இமாசலப்பிரதேச முதல்வராக வீர்பத்ரசிங் மீண்டும் பொறுப்பேற்கிறார். புதிய சட்டமன்ற இந்திரா காங்கிரஸ் உறுப்பினர்கள் இன்று கூடி, வீர்பத்ரசிங்கை சட்டமன்ற கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுத்தனர்.

---

# இலவச மின்சாரம் (ஆளுநர் உரை... 2ம்-பக்கத் தொடர்ச்சி)

தெரிவித்துக் கொள்வதில் மகிழ்ச்சி அடைகிறேன். இதைப் போன்றே ஏனைய பெரிய மாவட்டங்களையும் படிப்படியாகப் பிரிக்க அரசு தக்க ஆணைகளைப் பிறப்பிக்கும்.

கடந்த ஆண்டுக்கு முந்தைய ஆண்டில் பருவ மழை பொய்த்ததால் மாநிலத்திற்கு வெகுவான பாதிப்பு ஏற்பட்டிருந்தபோதிலும், கடந்தஆண்டு அத்தகைய பாதிப்பிலிருந்து மாநிலம் பெருமளவுக்கு விடுபட்டிருந்தது என்றாலும், 1983-84 ஆம் ஆண்டில் இம் மாநிலத்தில் சில பகுதிகள் வெள்ளத்தால் சேதமுற்றன. பெருமழையின் காரணமாக 1983 டிசம்பரிலும், அதைத் தொடர்ந்து 1984 பிப்ரவரி மார்ச் திங்கள்களிலும் தஞ்சாவூர் மாவட்டத்தில் பெரும் வெள்ளச் சேதம் ஏற்பட்டது. 1984 நவம்பரில் ஸ்ரீஹரிகோட்டா அருகே தென் ஆந்திரக் கடற்கரையைக் கடந்த புயல்காற்று சென்னை மாநகரின் ஒரு பகுதியையும் அதைச்சுற்றியுள்ள பகுதிகளையும்

பெரிதும் பாதித்தது. மத்திய அரசு உரிய நேரத்தில் இதற்காக அளித்த நிதியுதவிக்கும் நிவாரண நடவடிக்கைகளுக்காக இம் மாநிலத்திற்கு மொத்தம் ரூ. 18.76 கோடி அளவில் அனுமதி வழங்கியதற்கும் மத்திய அரசுக்கு நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளோம். மத்திய அரசு வழங்கும் தொகையை எதிர்பார்த்து மாநில அரசும் சொந்த நிதியிலிருந்து ரூ. 15.68 கோடி அளவுக்கு ஏற்கெனவே செலவிட்டு உள்ளது.

## 7 லட்சம் டன் நெல் கொள்முதல்...

எனினும் இவ்வாண்டில் அமைந்துள்ள திருப்திகரமான உணவு நிலைமை, மிகுந்த நம்பிக்கை அளிப்பதாக உள்ளது. கடந்த ஆண்டு நமது மாநிலத்தில் போதிய அளவு மழை பெய்து மேட்டூர் நீர்த்தேக்கத்தில் போதிய அளவு நீர் தேங்கியிருந்தது: மொத்த குறுவை விளைச்சல் 14 இலட்சம் டன் அளவைத் தாண்டியுள்ளது: எப்போதும் இல்லாத அளவுக்கு 6.27 இலட்சம் டன் அளவுக்குக் கொள்முதல் செய்யப்பட்டது. இதன் காரணமாக, மத்திய தொகுப்பிற்கு ஒரு இலட்சம் டன் அரிசியையும் ஒரு இலட்சம் டன் நெல்லையும் கொடுக்க நாம் உறுதி அளித்தோம். சம்பா அறுவடையும் மனநிறைவு அளிப்பதாய் உள்ளது. 7 இலட்சம் டன் அளவிற்குக் கொள்முதல் இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. இதனால், பொது விநியோக முறையின் கீழ் பெருகிவரும் தேவையை நிறைவேற்றி எதிர்காலத்தை நம்பிக்கையுடன் நாம் சந்திக்க வகை செய்திருக்கிறது.

உற்பத்தியைப் பெருக்குவதற்கு ஊக்கமளிக்கும் வகையில், இவ்வரசு, உற்பத்தி ஊக்கத் தொகையாக, குறுவை, சம்பா பருவக் காலங்களில் நேரடிக் கொள்முதல் நிலையங்களில் விற்பனை செய்யப்படும் ஒவ்வொரு குவிண்டால் நெல்லுக்கும் ரூ. 15 என்ற வீதத்தில் ஊக்கத்தொகையை இடுபொருள் உதவித்தொகையாக வழங்கும்திட்டத்தை தொடர்ந்து செயற்படுத்தி வருகிறது. இதற்கென்று அரசு ரூ. 12 கோடி அனுமதி வழங்கியுள்ளது. ஏற்கெனவே, நெற்பயிருக்கு மட்டுமே அளிக்கப்பட்டு வந்த பயிர்க்காப்புறுதி திட்டம் 1983-84முதல்நிலக் கடலைப் பயிருக்கும் நீட்டிக்கப்பட்டது. தவணைத் தொகைக்காக வழங்கப்பட்டு வந்த உதவித்தொகையும் 50 விழுக் காட்டிலிருந்து 66 விழுக்காடாக உயர்த்தப்பட்டுள்ளது.

## கடனை திருப்பி செலுத்த சலுகை

இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தைச் செயற்படுத்துவதில் முன்னோடியாக விளங்கும் சில மாநிலங்களில் தமிழ்நாடும் ஒன்றாகும். துரதிருஷ்டவசமாக, கடன் வசூலின் அளவு மிகக் குறைவாக உள்ளதாலும், உதவித் தொகைக்காக அரசை மட்டுமே பெரும்பான்மையாக நம்பியிருப்பதாலும் இவ்வியக்கம், அதன் உயிரோட்டத்தை இழந்து வருகிறது. இத்துறைக்குப் புத்துயிரளிக்கவும், மோசமான பருவ கால நிலைகளின் காரணமாக உழவர்களின் கடன் சுமை அதிகரித்து வருவதைத் தவிர்க்கும் வகையிலும், இவ்வரசு அவர்களுக்குக் கடனிலிருந்து நிவாரணம் அளிக்கும் பொருட்டு, அவ்வப்போது, தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது.

மேற்சொன்ன நிதி உதவி வசதிகள் செய்திருந்த போதிலும், கூட்டுறவுத் துறைகளில் வசூல் தொடர்ந்து மோசமாகவே உள்ளது. அரசு அறிவிக்கும் திட்டங்களை முழுமையாக பயன்படுத்திக்கொள்ளும் வகையில் பயனடைவோர் முழு மனதுடன் ஒத்துழைப்பு நல்கி, கூட்டுறவு அமைப்பு முறையை வலுப்படுத்த முனைந்தாலொழிய, இத்துறையின் கடன் வழங்கும் நோக்கத்தை முனைப்பாகத் தொடர்ந்து செயற்படுத்த இயலாது. தாங்கள் செலுத்த வேண்டிய நிலுவைத் தொகை முழுவதையும் செலுத்தும் உழவர்களுக்கு அவர்கள் செலுத்த வேண்டிய நீண்டகாலநிலுவை மீதானவட்டிதொகை

அபராத வட்டித் தொகைஆகியவற்றிற்கு விலக்களிக்கும் சலுகையை அரசு அண்மையில் அறிவித்துள்ளதோடு, இச்சலுகையை 31-3-1985 ஆம் நாள் வரை நீட்டித்துள்ளது. அரசு அளித்துள்ள இச் சலுகையை விவசாயப் பெருங்குடி மக்கள் பயன்படுத்திக் கொள்வர் என்றும் குறிப்பாக, அமோக விளைச்சல் ஏற்பட்டுள்ள இவ்வாண்டில் நிலுவைத் தொகைகள் முழுவதையும், செலுத்த முன் வருவர் என்றும் நான் உளமார நம்புகிறேன்.

தமிழ்நாடு 1983 ஆம் ஆண்டு கூட்டுறவுச் சட்டம் என்னும் புதிய சட்டம் இயற்றப்பட்டுள்ளது. கூட்டுறவுச் சங்கக் குழுக்களுக்கான தேர்தல்கள் நடைபெறுவதற்கு வகைசெய்யும் பொருட்டு இப்புதிய சட்டத்தின்கீழ் விதிகளை அரசு இயற்றி வருகிறது.

## மின்சார உற்பத்தி அதிகரிப்பு

தொழில் வளர்ச்சிக்கும், மேம்பாட்டிற்கும் மின்சக்தி இன்றியமையாத தூண்டு கோலாகும் என்பதை யாவரும் ஒப்புக் கொள்வர்.

1984—85 ஆம் ஆண்டில், திட்டச் செலவில் 25 விழுக்காட்டிற்கும் மேற்பட்ட தொகையை அரசு மின்சக்தி உற்பத்திக்காக ஒதுக்கியது. ஏழாவது திட்டத்திலும் நிதி ஒதுக்கப் பெறுவதில் இத்துறை முதன்மையான முன்னுரிமைப் பெறும் நிலையில் உள்ளது.

தமிழ்நாடு மின் வாரியத்தின் கட்டுப்பாட்டில் உள்ள அனல் மின் நிலையங்களை முழுமையாகப் பயன்படுத்திக்கொண்டதன் பலனாக மின்சக்தி உற்பத்தி பெருமளவு உயர்ந்துள்ளது. 1983 ஏப்ரல் முதல் டிசம்பர் திங்கள் வரையில் 7,381 மில்லியன் யூனிட்டுகள் மின்சக்தி வழங்கப்பட்டது. இது 1984 ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் டிசம்பர் திங்கள் வரையில் 40 சதவீதம் அதாவது 10,374 மில்லியன் யூனிட்டுகளாக உயர்ந்துள்ளது. ஆயினும் மின்சக்தி தேவை அதிகரித்துள்ளதாலும், மின் இணைப்புக்களை வழங்குவதில் தாராளமான கொள்கை பின்பற்றப்பட்ட காலத்தில் கொடுக்கப்பட்ட இணைப்புக்களால், மின்சக்தி பயன்பாட்டு அளவு மேலும் 300 மெகாவாட் அதிகரித்துள்ளது.

## இலவச மின்சாரம்

இம் மாநில அரசு அண்மையில் அளித்துள்ள சலுகைகளில் மிக முக்கியமான சலுகை யாதெனில் 'ஒரு குடிசைக்கு ஒரு விளக்கு' திட்டத்தின் கீழ், குடிசைவாழ் மக்களுக்கு 15—9—1984 முதல் மின்னொளி இலவசமாக வழங்குதல், விவசாயத்திற்கு நீரேற்றும் பொறிகளை (பம்ப் செட்டுகளை) மட்டுமே முழுமையாக நம்பியுள்ள சிறு உழவர்களுக்கு மின்சக்தியை இலவசமாக வழங்குதல் ஆகியவையாகும்.

ஒரு குதிரை திறன் கொண்ட நீரேற்றுப் பொறிக்கு, ஆண்டொன்றுக்கு ரூ. 75 மட்டுமே செலுத்தவேண்டும் என்று ஒரே படித்தான கட்டணவிதச் சலுகை ஏனைய உழவர்களுக்கும் அளிக்கப்பட்டுள்ளது.

அரசின் மேற்சொன்ன முடிவுகளின் காரணமாக சுமார் 6 லட்சம் குடிசைவாழ் மக்களும் 10 இலட்சத்திற்கும் மேற்பட்ட உழவர்களும் பயனடைந்துள்ளனர்.

கல்பாக்கம் அணுமின் உற்பத்தி நிலையத்தில் உற்பத்திசெய்யப்படும்மின்சக்தியைப் பகிர்ந்துகொள்வதில்ஏற்பட்டகருத்துவேறுபாடு இம்மாநிலத்திற்குச் சாதகமாகவே முடிந்தது என்பதையும் நான் மகிழ்வோடு தெரிவித்துக் கொள்கிறேன்

முதல் பிரிவில் உற்பத்தி செய்யப்படும் முழுமின் சக்தி 235 மெகாவாட்டும், இதே திறனுள்ள இரண்டாம் பிரிவில் உற்பத்தி செய்யப்படும் மின்சக்தி அளவில் ஒரு பாதியும் தமிழ்நாடு மின் வாரியத்திற்கு வழங்கப்படும் என்று மத்திய அரசு தற்போது உறுதி அளித்துள்ளது.

## தொழில் துறை: தமிழகம் முதலிடம்

தொழில்துறையில் தமிழ்நாடு மாநிலம் சீராக முன்னேறிவருகிறது. தொழில் தொடங்குவதற்கான அனுமதிக்கடிதங்கள்வழங்குதல், அத்தகைய அனுமதிகளைத் தொழில் தொடங்குவதற்கான உரிமங்களாக மாற்றுதல் ஆகியவை தொடர்பான நடவடிக்கைகள் குறித்து உன்னிப்பாகக் கண்காணிக்கப் பட்டு வருகிறது. இம் மாநிலம் தொழிற் துறையில் பின் தங்கியுள்ள பகுதிகளைக் கொண்டுள்ளபோதிலும் "தொழிற்சாலை இல்லாத மாவட்டம்" என்று அறிவிப்பு இல்லாத குறை உள்ளது. தொழிற்சாலை இல்லாத வளர்ச்சி வட்டாரத்தை, அறிவிக்க வேண்டுமென்ற கொள்கையை நாங்கள் வலியுறுத்தி வருகிறோம். இதற்குமத்தியஅரசிடமிருந்துஆதரவானபதிலை எதிர்பார்க்கின்றோம்.

மத்தியஅரசின் மூலதன உதவித் தொகை திட்டத்தின் கீழ் மற்ற மாநிலங்களைவிட அதிகமான அனுமதிகள் வழங்கி தமிழ்நாடு மாநிலம் முதலிடம் பெற்றுள்ளது நமக்கு பெருமை தருவதாகும்.

## திருச்சியில் ரூ. 170 கோடியில் புதிய தொழிற்சாலை

மத்திய அரசின் முதலீடுகளைப் பொறுத்தமட்டில், போதிய நியாயமான அளவிற்கு இம் மாநிலத்தில் முதலீடு செய்ய வேண்டுமென்று மாநில அரசு மத்திய அரசினை வலியுறுத்தி வருகின்றது, சென்னை எண்ணெய்சுத்திகரிப்பு ஆலையின்திறனளவை 2.8 மில்லியன் டன்னிலிருந்து 5.6 மில்லியன் டன்னாக உயர்த்தும் பணி நடைபெற்று வருகின்றதென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், திருச்சிராப்பள்ளியில் ரூ.170 கோடி செலவில் 'கனரக உலோகக் கலவை வடுருவித் தொழிற்சாலை ஒன்றினை' அமைக்க மத்திய அரசு அனுமதிவழங்கியுள்ளது.

இதற்காகவும், ஆவடியிலுள்ள கனரக வண்டிகள் தொழிற்சாலையினை விரிவுபடுத்துவதற்காகவும் மாநில அரசு இலவசமாக நிலம் வழங்கியுள்ளது,

திருச்சிராப்பள்ளியில் இரண்டாவது இரயில் பெட்டித் தொழிற்சாலை அமைக்க மத்திய அரசுக்கு இலவசமாக நிலம் வழங்கவும் மாநில அரசு முன்வந்துள்ளது.

இதற்கு மத்திய அரசிடமிருந்து பதில் எதிர்பார்க்கப்படுகிறது. இதற்கு அனுமதி வழங்குவதுடன், மணலியிலுள்ள சென்னை இரசாயன உரத் தொழிற்சாலைக்கும், உதகமண்டலத்திலுள்ள 'இந்துஸ்தான் ஃபோட்டோ ஃபிலிம்' தொழிற்சாலையினை விரிவுபதத்துவதற்கும் மத்திய அரசு அனுமதி வழங்குமென்று நாம் எதிர்பார்க்கிறோம்.

சேலம் உருக்காலையினை முழு அளவிலான உருக்காலையாக மாற்ற வேண்டுமென்னும் நீண்ட நாள் கோரிக்கையும் ஏற்றுக் கொள்ளப்படுமென்று எதிர்பார்க்கிறோம்.

## புதிய சர்க்கரை ஆலைகள்

எனது கடந்த உரையில், தமிழ்நாடு பத்திரிகைத் தாள்·காகித உற்பத்தியை மாநில அரசு தொடங்கியதை தெரிவித்திருந்தேன்,

பத்திரிகைக்காகிதம் எழுதுதாள் தயாரிப்பில் கரும்புச் சக்கையினைப் பயன்படுத்தும் புதிய தொழில் நுட்ப முறையினை இத்திட்டம் அறிமுகம் செய்துள்ளது. இத்திட்டம் 1984 ஆம் ஆண்டில் சோதனை உற்பத்தியினைத் தொடங்கியுள்ளதென்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

ரூ. 10. கோடி செலவில் அமைக்கப்பட்ட திருத்தணி கூட்டுறவுச் சர்க்கரை ஆலை கடந்த ஆண்டு உற்பத்தியினை தொடங்கியுள்ளது.

கரும்பு உற்பத்தியாளர்களின் நலன்களைக் காக்கும் பொருட்டு 'மதுரா சுகர்ஸ்' நிறுவனத்தை அரசு தன் பொறுப்பில் எடுத்துக் கொண்டுள்ளதுடன் அதனை ரூ. 5 கோடி செலவில் நவீனப்படுத்தி விரிவுபடுத்தவும் நடவடிக்கை எடுத்துள்ளது.

ரூ. 10.8 கோடி செலவில் தஞ்சாவூர் மாவட்டம் மயிலாடுதுறையில் புதிய சர்க்கரை ஆலை ஒன்று நிறுவப்பட்டு வருகிறது.

## அனைவருக்குர் ஆரோக்கிய வாழ்வு

"கி. பி. 2000-க்குள் அனைவருக்கும் ஆரோக்கிய வாழ்வு" அளிக்கும் நோக்கத்தினை எய்த அரசு தொடர்ந்து பணியாற்றி வருகின்றது. 5.000 மக்கள் தொகை கொண்ட ஒவ்வொரு பகுதியிலும் ஒரு சுகாதார துணை நிலையம் என்றவீதத்தில்தற்போது மொத்தம் 5,602 துணைச் சுகாதார நிலையங்கள் உள்ளன.

தேசிய கிராமப்புற வேலைவாய்ப்புத் திட்டம், ஊரக நிலமற்றோர் வேலை வாய்ப்புறுதித் திட்டம் முதலான வேலைவாய்ப்புப்பெருக்கத்திட்டங்களைத் தீவிரமாகச் செயற்படுத்துவதன் மூலம் கிராமப் பகுதிகளில் வேலை வாய்ப்புகளைப் பெருக்க இயன்ற நடவடிக்கைகள்அனைத்தையும் அரசு மேற்கொண்டு வருகிறது.

அத்துடன், எஸ். எஸ். எல். சி., பி. யு. சி. தேறியுள்ளவர்களுக்கும் வேலைவாய்ப்பின்மை உதவித் தொகை வழங்கும் திட்டத்தை நீட்டித்துள்ளது.

உதவித் தொகையின் அளவும் கணிசமாக உயர்த்தப்பட்டுள்ளது. இத்திட்டத்திற்கு அடுத்த ஆண்டு முழுவதற்குமாகும் மொத்தச் செலவு ரூ. 5 கோடி அளவில் அமையும்.

## சமூகக் காடு வளர்ப்பு

இந்த அரசு, சமூகக்காடு வளர்ப்பின்கீழ், சுவீடன் நாட்டு நிதி உதவியுடன் ஒரு பெரிய திட்டத்தைத் தமிழ்நாட்டில் செயற்படுத்தி வருகிறது.

இத் திட்டத்திற்கென 1984-85-ல் ரூ. 8.23 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. 1984 டிசம்பர் திங்கள் முடிய 268 இலட்சம் நாற்றுக்கள் நடப்பட்டு, 16, 251 எக்டேர் பரப்பில் தோட்டமும் 1, 260 கிலோ மீட்டர் நீளத்திற்கு துண்டு நிலத்தோட்டங்களும் வளர்க்கப்பட்டுள்ளன.

## குடிநீர் சப்ளை

பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்குவது மாநில அரசின் திட்டங்களில் உயரிய முதலிடம் பெறுகிறது என்பதை நீங்கள் அறிவீர்கள்.

ஆறாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் பிரச்சினைக்குரிய குடியிருப்புகளில் 17,193 குடியிருப்புகளுக்குக் குறைந்தது ஒரு குடிநீர் வாயில் கிடைக்குமாறு செய்யப்படும்.

உலக வங்கித் திட்டத்தின் கீழ் ரூ.149.42 கோடி செலவில் மதுரை, கோயம்புத்தூர், சேலம் போன்ற பெருநகரங்களிலும், 75 நடுத்தர நகரங்களிலும் உள்ள 38.96 இலட்சம் மக்களுக்கு குடிநீர் வழங்கும் திட்டத்திற்கு ஒப்புதல் வழங்கப்பட்டு பணி தொடங்கியுள்ளது.

ரூ. 15. 2 கோடி மதிப்பீட்டுச் செலவில் ஐரோப்பிய பொருளாதார சமுதாய அமைப்பின் உதவியுடன் பெரியகர், கோயம்புத்தூர் மாவட்டங்களில் 4இலட்சம் பேர் பயன்பெறும் வகையில் 726 குடியிருப்புகளுக்குப்பாதுகாக்கப்பட்ட குடிநீர் வழங்கும் திட்டம் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## உணவு உற்பத்தியில் சாதனை

வேளாண்மைத் துறையில் உற்பத்தியினை மேம்படுத்துவதற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட்டுள்ளது. 1984—85 ஆம் ஆண்டில் அநேகமாக 60 இலட்சம் மெட்ரிக் டன் என்ற சாதனை உற்பத்தி அளவை எய்துவோம் என்று எதிர்பார்க்கலாம்.

இனி வரும் ஆண்டில், இந்த ஆதாரத்தின் அடிப்படையில் மிகு பயன்தரும் உயர் ரகங்களை மக்களிடையே பரவச்செய்தல், திறமையாக உரத்தைக் கையாளுதல் ஒருங்கிணைந்த பயிர்ப் பூச்சிக்கட்டுப்பாட்டு முறைகள்உட்பட நவீன அறிவியல் வேளாண் பொருளாதார தொழில்நுட்ப முறைகளை அறிமுகம் செய்தல் ஆகியவற்றின் மூலம் ஆண்டிற்கு 4முதல்5சதவீதம் வளர்ச்சி காணவும் கருதப்பட்டுள்ளது. வேளாண்மையில், தண்ணீர் கிடைத்தற்கரிய, மிகமுக்கியமான இடுபொருளாகும்.

அண்மையில் தொடங்கிய வேளாண்மை வளர்ச்சி நடவடிக்கைகளில் நன்முறையில் சிக்கனமாகத் தண்ணீரைப் பயன்படுத்தும் முறை 1985—86 ஆம் ஆண்டில் மேலும் தீவிரப்படுத்தப்படும். உயர்ந்த அளவில் பயன் பெறுவதற்கு "வாரபந்தி" எனப்படுகிற சுழல் முறை நீர்பயன் வழிமுறைகள் பற்றி நம்முடைய பெரிய பாசனப் பகுதிகளில் ஆய்வுகள் நடத்தப் பட்டுள்ளன; வருமாண்டில் இத்திட்டங்களின் வாய்ப்பளவு மேலும் விரிவு படுத்தப்படும்.

## அரசு ஊழியர்கள் நலன் காக்க திட்டங்கள்

அரசுப் பணியாளர்கள் நலனில் தமக்குள்ள பொறுப்பை அரசு நன்கு உணர்ந்துள்ளது. புது வகையான பணியாளர் நலத்திட்டங்கள் பலவற்றை இவ்வரசு ஏற்கெனவே அறிவித்துள்ளதை நீங்கள் அறிவீர்கள். அத்தகைய திட்டங்களில் அண்மையில் அறிவிக்கப்பட்ட ஓய்வுகால நன்மைத் திட்டமும் ஒன்றாகும்.

கடினமாக அயராது பணியாற்றும் பொறுப்புள்ள காவல் படையினருக்கு நலத் திட்டங்கள் பலவற்றை அரசு தொடங்கியுள்ளது 'டெரிகாட்டன்' சீருடைகள் அளிப்பது, மழைக்கோட்டுகளும், காலணிகளும் வழங்குவது, இன்றியமையாப் பொருட்கள் வழங்கலுக்கு அளிக்கப்படும் உதவித் தொகையின் அளவை உயர்த்துவது ஆகியவை இத்திட்டங்களில் அடங்கும்.

## நான்காம் ஊதியக் குழு

கடந்த ஆண்டு அரசு அறிவித்தது போல நான்காம் சம்பளக் குழு அமைக்கப்பட்டது; அக்குழு தனது ஆய்வுகளை இறுதியாக்கும் கட்டத்தை அடைந்துள்ளது.

அக்குழுவின் பரிந்துரைகள் கிடைக்கப் பெறுகின்றவரையில், அதற்கு முன்னதாக அரசுப் பணியாளர்களுக்கு இடைக்கால நிவாரணம் அளிப்பது குறித்து அரசு தானாகவே முன்வந்து அறிவிப்பு வெளியிட்டது.

இந்நாட்டிலுள்ள பிறமாநிலங்களுடன் ஒப்பிடுகையில், ஒரு பெரிய எண்ணிக்கையில் வழங்கப்பட்டது என்று சொல்லக்கூடிய அளவுக்கு 8 இலட்சம் அரசுப் பணியாளர்களுக்கு இடைக்கால நிவாரணத் தொகை வழங்கப்பட்டது.

அரசுப் பணியாளர்களில் திங்களொன்றுக்கு ரூ. 350-ம் அதற்குக் குறைவாகவும் சம்பளம் பெறுவோர் ஒவ்வொருவருக்கும் ரூ. 200-ம் ஏனையோருக்கு ரூ. 300-ம் ஒரு மொத்த நிவாரணத் தொகையாக வழங்கப்பட்டது,

இதில் 50 விழுக்காடு மட்டும் சம்பளக் குழுப் பரிந்துரைகளின் அடிப்படையில் வழங்கப்படவிருக்கிற நிலுவைத் தொகையில் சரிக்கட்டப்படும்.

ஆக, இவ்வரசு, வாக்காளப் பெருமக்களுக்கு அளித்த பல்வேறு வாக்குறுதிகளை நிறைவேற்றி வருவதுடன், மக்கள் சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினரின் தேவைகளையும் விருப்பங்களையும் நிறைவேற்றி வருகிறது.

இருப்பினும், வளங்கெழு அரசுதனை உருவாக்கிவரும் பணி, முடிவிலாத தொடர்பணியாகும். இனி இவ்வரசு எதிர் காலத்தில் மேலும் தொடங்கக் கருதியுள்ள புதிய திட்டங்கள் பற்றிய விவரங்களை உங்கள் முன் எடுத்துக் கூற விரும்புகிறேன். நமது முதலமைச்சர் 1984 ஆகஸ்டு 15-ம் நாள் அறிவித்திருந்த பல்வேறு உறுதிமொழிகள் மீது எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் பற்றிஉங்களுக்கு நான் ஏற்கனவேகூறியுள்ளேன், இப்பணிகள் தொடர்வதோடு, புதிய திட்டங்கள் பலவும்இனிதொடர்ந்து மேற்கொள்ளப்படும்:-

## புதிய திட்டங்கள்

போதிய குடிநீர் ஆதாரம் உள்ள கிராமப் பகுதிகள் அனைத்திலும் குடிநீர்க் குழாய் இணைப்புகள் உள்ளிட்ட கிராமக் குடிநீர் வழங்கல் திட்டத்தை மேலும் விரிவுபடுத்தக் கருதப்பட்டுள்ளது.

ஆதி திராவிடர் நலமேம்பாட்டிற்காக விரிவான திட்டங்கள் தயாரிக்கப்படும்.

நகராட்சிப் பகுதிகள் மேம்பாட்டிற்காக காலவரையோடு கூடிய திட்டம் தயாரிக்கப்படும்.

கைத்தறி வளர்ச்சிக்கு மேலும் முக்கிய கவனம் செலுத்தும் பொருட்டு, தலைமைச் செயலகத்தில் தொழில் துறை இரண்டாகப் பிரிக்கப் பட்டு, கைத்தறி நெசவு கதர் இவற்றிற்கென்று தனித் துறை அமைக்கப்படும்.

கைத்தறி நெசவாளர்களின் வீட்டு வசதிக்காக மூன்றாண்டுக் கால அளவில் முடிப்பதென்ற காலவரையோடு கூடிய திட்டம் தயாரிக்கப்படும்.

## குடும்பநல உதவிநிதி உயர்வு

அரசுப் பணியாளர்களுக்கான குடும்பநல நிதி ரூ. 10,000-லிருந்து ரூ. 20,000-க்கு உயர்த்தப்படும். இதற்குத் தக்கவாறு திட்டம் தயாரிக்கப்படும்.

கடந்த ஆண்டில் உழவுத் தொழிலாளர்கள், கைவினைஞர்கள், சிறுஉழவர்கள், சொற்பநிலஉழவர்கள், கட்டுமான தொழிலாளர்கள் ஆகியோரது நலனுக்காக அறிவிக்கப்பட்ட இழப்பு ஈட்டுத் திட்டத்தின்படி அத்தொழிலாளர்கள் பணியில் ஈடுபடும் போது இறக்க நேரிட்டால் அளிக்கப்படும் இழப்பு ஈட்டுத்தொகை ரூ 5,000-லிருந்து ரூ. 10,000-மாக உயர்த்தப்படும்.

1984 ஆகஸ்டு 15 ஆம் நாள் நமது முதலமைச்சர் அறிவித்தபடி உழவுத் தொழிலாளர்கள், கைவினைஞர்கள், சிறு உழவர்கள், சொற்ப நில உழவர்கள், ஏனைய தொழிலாளர்கள் ஆகியோருக்கான காப்புறுதி-ஓய்வுகால நலத் திட்டம் விரிவான அடிப்படையில் செயற்படுத்தப்படும்.

ஏற்கெனவே இதற்கென்று, 167 தனி வட்டாட்சியர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். இத்திட்டத்தில் உறுப்பினர்கள் சேர்க்கப்பட்டு கிராம நிர்வாக அலுவலர்கள் மூலமாக சந்தாத்தொகை வசூலிக்கப்படும். இதற்கென காலவரம்பு 31-3-1985 வரை நீட்டிக்கப்பட்டுள்ளது.

மீனவர்கூட்டுறவுச்சங்கங்கள் மீனவர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்யும் மையஅமைப்புகளாகப் பணியாற்றும் வகையில் வலுப்படுத்தப்பட்டு விரிவு படுத்தப்படும்.

மரபு சாராபுதியவகை எரிசக்தி ஆதாரங்களைப் பயன்படுத்தும் திட்டத்தைப் பெரிய அளவில் இவ்வரசு தொடங்கியுள்ளது.

சூரிய வெப்ப சக்தி ஆற்றலுடைய சாதனங்களைத் தயாரிக்கும் தொழிற் சாலைகளுக்கு ஊக்கத் தொகை அளிக்கப்படும்.

## ரூ.1000 கோடியில் தொழில்கல்வி

முதலமைச்சர் தொடங்கிய வாழ்க்கைத் தொழில் அடிப்படையிலான கல்வித் திட்டம், பொருத்தமான வாழ்க்கைத் தொழில் பாடமுறைகளோடு பல பள்ளிகளில், அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது. ரூ. 1000 கோடி அளவில் செலவாகும் இத்திட்டம் படிப்படியாக நிறைவேற்றப்படும். இத் திட்டத்தினை நிறைவேற்ற மத்திய அரசு மூலம் உதவி பெற இவ்வரசு உலக வங்கியை அணுகுவதென்று கருதியுள்ளது,

## சத்துணவுத் திட்டம் பெற்ற பாராட்டு

முதலமைச்சர் சத்துணவுத் திட்டம் 10 முதல் 15 வயது பிள்ளைகளும் பயன்பெறும் வகையில் 15—9—84 லிருந்து நீட்டிக்கப்பட்டது; இதன் மூலம் இன்று சுமார் 80 லட்சம் பிள்ளைகள் பயனடைந்து வருகின்றனர். விரிவான அளவில் மேற்கொண்ட இம் மாபெருந்திட்டம் இந்நாட்டில் மட்டுமல்லாது வெளி நாட்டிலும் பாராட்டைப் பெற்றுள்ளது.

இத்தகையதொரு திட்டத்தின் பல தரப்பட்ட நன்மைகளும் ஆரோக்கியமான, வலுவுள்ள எதிர்கால சந்ததியினரை உருவாக்கும் சிறப்புத் தன்மையும் அனைவராலும் பாராட்டப்பட்டுள்ளது என்பதையறிந்து மகிழ்ச்சியடைகிறேன்.

இவ்வகையில் முன்னோடியாக விளங்கும் தமிழ்நாட்டை அனுசரித்து பிற மாநிலங்களும் இத்திட்டத்தைப் பின்பற்றி வருவது நமக்கு பெருமிதமளிக்கிறது. இவ்வாறாக, சத்துணவுத் திட்டம் இம்மாநிலத்தில் உறுதியாக வேரூன்றியுள்ளது.

மாநிலத்தின் வறிய குழந்தைகளின் பல்வேறு தேவைகளை நிறைவு செய்யக்கூடிய நலத் திட்டங்களின் மற்றொரு தொகுப்பை வெளியிடுவதன் மூலம் குழந்தைகளின் ஒருங்கிணைந்த நல வாழ்விற்கு வகைசெய்யும் திட்டங்களை நிறைவேற்ற இந்த அரசு கருதுகிறது,

ஆகவே, I ஆம் வகுப்பு முதல் VIII ஆம் வகுப்பு வரையிலும் தகுதியுள்ள பிள்ளைகள் அனைவருக்

(5-ம் பக்கம் பார்க்க)

சட்டசபை கூட்டுக் கூட்டம்:

# முன் கூட்டியே வந்து அமர்ந்தார் முதல்வர்: கருணாநிதி வரவில்லை

சென்னை, மார்ச் 8— தமிழக சட்ட மேலவை, பேரவை கூட்டுக் கூட்டம் இன்று காலை 10 மணிக்கு துவங்கியது. இந்த கூட்டு அவையில் ஆளுனர் குரானா உரை நிகழ்த்தினார்.

முன்னதாககாலை9-49க்கு முதல்வர் புரட்சித் தலைவர் சபையில் வந்து அமர்ந்தார்.

புரட்சித்தலைவர் வந்ததும் நாஞ்சில்மனோகரன் எழுந்து சென்று, புரட்சித்தலைவருடன்கை குலுக்கினார். எதிர்க் கட்சித் தலைவர் வரிசையிலிருந்து எழுந்து வந்து புரட்சித் தலைவர்அருகில் அமர்ந்து அவரிடம் உடல் நலம் விசாரித்தார்.

புரட்சித் தலைவரிடம் செல்லமாக கன்னத்தைப் பிடித்து,ஏதோபேசிவிட்டு விடைபெற்று சென்றார்.

கூட்டு கூட்டத்தில்உரை நிகழ்த்துவதற்காக 9.55 மணிக்கு,ஆளுநர் குரானா சபைக்குள் வந்தார்.ஆளுநரை சட்ட மேலவைத் தலைவர் ம. பொ. சி-யும் பேரவைத்தலைவர்பி.எச் பாண்டியனும் சபாநாயகர் ஆசனத்தில் அமரச் செய்தனர். ஆளுநருக்கு இடது புறம் ம.பொ.சியும்,வலது புறம் பி. எச். பாண்டியனும் அமர்ந்தனர்.

தி.மு.க. தலைவர் கருணாநிதியைத் தவிர அனைத்து எம், எல்.சி.க்களும்,எம்.எல்.ஏ.க்களும் சபைக்கு வந்திருந்தனர்,

ஆளுநர் குரானா 10 மணிக்குத்தனது உரையை படிக்கத் தொடங்கினார் ஆங்கில உரையை ஆளுநர் வாசித்தார்.

அதன் தமிழாக்கப் பிரதியை பேரவைத் தலைவர் பி. எச். பாண்டியன் படித்தார்.

ஆளுநர் தனது உரையை 10.34க்கு படித்து முடித்தார். 10.35க்கு அதன் தமிழ் பிரதியை சபாநாயகர் பி. எச். பாண்டியன் படிக்கத் தொடங்கி 11.06க்கு முடித்தார். 11.07க்கு அவையிலிருந்து ஆளுநர் புறப்பட்டுச் சென்றார்.

## ஏல விற்பனை

1)Bohra&Brothers No.20 S. Nagar, 3rdst., Choolaimedu. Madras-94. (20-7-83 முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 19-3-85 அன்று மதியம் 1 மணிக்கும்.

2) Pholchand&s Co,No. 1, Sowrashtra Nagar, 3rd St., Choolaimedu, Ms-94. (25-2-83 முதல் 31-12-83 வரை). ஏலத்தேதி 19-3-85 அன்று பகல் 12 மணிக்கும்

(3) Bhawarlal Manack Chand. 647, Poonamalli High Road Madras-29 (31 12.79க்கு முன்பு) ஏலத்தேதி 25.3.85 அன்று மதியம் 2 மணிக்கும், (4) B. Bhikam chandSowcar, NO:60, Paper mills Road, Madras-11 அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 15.2.84 அன்று காலை 10 மணி மாற்றியமைக்கப்பட்டுள்ள ஏலத்தேதி 29.3.85 அன்று மதியம் 2 மணிக்கும்,

5. C. Ganeshmull Jain No 177 R. K. mutt Road Madras- 600 028 (13-4-83 முதல் 30-11-83 வரை)ஏலத்தேதி 29-3-85 அன்று பகல் 11 மணிக்கும்,

6. Sri Jagadesh, No 3 East Club Road Shenoy Nagar, Madras-30(24-8-82 முதல் 31-1-84 வரை)ஏலத்தேதி 8-4-85 அன்று காலை 10 மணிக்கும்,

7. Parasamal SowcarNo1 South mada Street Konnur Madras-49. (24-8-82முதல் 31-12-83 வரை) ஏலத்தேதி 8 4-85 அன்று மதியம் 1 மணிக்கு,

8.D. Bhawarlal Choudhry No. 110. M. T. H. Road, Villivakkam, Madras-49. (1-1-83 முதல் 28.2.84 வரை) ஏலத்தேதி 8.4.85 அன்று மதியம் 2 மணிக்கும்

9. Pannalal Jain, No 98 Chemiers Road, Teynampet Madras-18. (1-7-83 முதல் 31-12-83) வரை ஏலத்தேதி 9-4-85 அன்று மதியம் 1 மணிக்கும்,

10.L.Chambalal.Jain-No8, Mettustreet, Madras-1 (1-8-83 முதல் 31-1-84 வரை) ஏலத்தேதி 9-4-85 அன்று மதியம் 2 மணிக்கும்,

11. SMT. kamaladevi, No-396, Sanner palayam, Aminjkarai. madras- 29 (1-4-83 முதல் 31-12-83 வரை) அறிவிக்கப்பட்டஏலத்தேதி 21-3-82 அன்று காலை 10 மணி மாற்றி அமைக்கப்பட்ட ஏலத்தேதி 12—4—85 அன்று காலை 10 மணிக்கு

12.Sukanrajmahaveerchand Jain, 646, Poonamallee High Road, Arumbakkam, Madras-29: (1-4-83 முதல் 31-12-83 வரை) அறிவிக்கப்பட்ட ஏலத்தேதி 21-3-85 அன்று 2 மணி, மாற்றியமைக்கப்பட்ட ஏலத்தேதி 12-4-85 அன்று மதியம் 2 மணிக்கும்,

மேற்படியார் கடைகளில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகாரிகள் முன்பு அரசு அங்கீகாரம் பெற்ற ஏலதாரர் எம். தரம்சந்த் ஜெயின் 150, சச்சிதானந்தம் தெரு, சென்னை-12ல் மாவட்ட ஆட்சியரின் உத்திரவுப்படி மேற் குறிப்பிட்ட ஏலத் தேதிகளில் ஏலம் போடுவார்.

# இந்தியா - பாகிஸ்தான் மோதும் உலகசாம்பியன் கிரிக்கெட் போட்டி

மெல்போர்ன்,மார்ச்8- ஆஸ்திரேலியாவில் உலக சாம்பியன் பட்டத்துக்கான கிரிக்கெட் போட்டி நடந்து வருகிறது. இதில் இந்தியா, பாகிஸ்தான், வெஸ்ட் இண்டீஸ், இங்கிலாந்து, ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து, இலங்கை உள்ளிட்ட 7 நாடுகள் கலந்து கொண்டன.

முதல் பிரிவு அரைஇறுதி ஆட்டத்தில்நியூஜிலாந்தை தோற்கடித்து இறுதி ஆட்டத்துக் தகுதியான இந்தியா, 2-வது அரை இறுதிப் போட்டியில் வெஸ்ட் இண்டீஸ் அணியை 7 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் தோற்கடித்தது பாகிஸ்தான்.

வரும்ஞாயிற்றுக்கிழமை நடக்கும் இறுதிப் போட்டியில் இந்தியாவும், பாகிஸ்தானும் மோதுகின்றன. இந்தியாவும், பாகிஸ்தானும்'ஏ'பிரிவில் இருந்த அணிகள் ஆகும். இரு அணிகளும்ஏற்கனவே கடந்த 20ந் தேதி லீக் போட்டியில் சந்தித்த போது. பாகிஸ்தானை 6 விக்கெட்டுகள் வித்தியாசத்தில் இந்தியா முறியடித்தது. இதனால் இந்தியாவுக்கு எதிராக பாகிஸ்தான் கடுமையாக போராடக்கூடும்.

இந்த சாம்பியன்போட்டியில்,இதுவரை இந்தியா 4 போட்டிகளிலும் ஒரு தோல்வியைக் கூட சந்திக்காது,இறுதிப்போட்டிக்கு வந்துள்ளது பேட்டிங், பீல்டிங் அனைத்திலுமே தற்போது உள்ள அணி சிறந்ததாகக் காணப்படுகிறது.

பரபரப்பான இந்த இறுதிப்போட்டி டெலிவிஷனில் ஞாயிற்றுக்கிழமை நேரடியாக ஒளி பரப்பப்படுகிறது. காலை 9-50 மணி முதல் மதியம் 1-30 வரையிலும் பின்னர் 2-15முதல்ஆட்டம்முடியும் வரையிலும் ஒளிபரப்பாகும்.

சட்டமன்ற உறுப்பினராக

# திருப்பத்தூர் மணவாளன் பதவி ஏற்றார்

சென்னை, மார்ச் 8- சமீபத்தில் நடைபெற்ற திருப்பத்தூர் சட்டமன்ற இடைத் தேர்தலில் கழக கூட்டணி வேட்பாளராக போட்டியிட்டு வெற்றி பெற்ற இ. காங்கிரசை சேர்ந்த எஸ்.பி.மணவாளன்இன்றுசட்டமன்ற உறுப்பினராக சபாநாயகர் பி.எச்.பாண்டியன் முன்னிலையில் பதவிப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்.

மணவாளன் பதவிப் பிரமாணம் எடுக்கும் போது, துணைசபாநாயகர் வி.பி.பாலசுப்ரமணியம் எதிர்க்கட்சித் தலைவா உ.சுப்பிரமனியம், முசிறி புத்தன் எம்.எல்.ஏ, நாட்ராம்பள்ளி அன்பழகன் எம்.எல்.ஏ, கல்லன் எம். எல். ஏ ஆகியோர் உடன் இருந்தனர்.

# ஆளுநர் உரை..

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

கும் இலவசமாகச் சீருடைகள் வழங்கக் கருதப்பட்டுள்ளது.

மேலும், இனி வருமாண்டிலிருந்து I ஆம் வகுப்புமுதல் VIII ஆம் வகுப்பு வரையிலும் தகுதியுள்ள பிள்ளைகளுக்கு இலவசமாகப் பாடபுத்தகங்கள் வழங்கும் திட்டமொன்றைத் தொடங்க உத்தேசிக்கப்பட்டுள்ளது. குழந்தைகள் உடல்நலப் பராமரிப்பு வசதிகள் மேற்கொண்டும் விரிவுபடுத்தப்பட்டு பெருக்கப்படும். மதிய உணவுவழங்கப்படும் 10,000 குழந்தை நலநிலையங்கள் பாலர் தொடக்கப்பள்ளிகளாக மாற்றப்பட உத்தரவிடப்பட்டுள்ளது.எஞ்சிய நிலையங்களும் இவ்வாறே மாற்றப்படும்.

பழுதுபட்ட நிலையிலுள்ள பள்ளிக்கட்டிடங்களைச் செப்பனிட காலவரையோடு கூடிய திட்டமொன்று வகுக்கப்படும்.

அவசியமான இடங்களிலெல்லாம் பள்ளிக் கட்டிடங்களைக் கட்டத்தனியே நிதி ஒதுக்கம் செய்யப்படும்.

இத் திட்டங்கள் தொடங்குவதன் மூலமாகக் குழந்தைகளின் ஒட்டு மொத்த நலனை அரசே கவனித்துக் கொள்கிறது என்பதையும், இத் திட்டங்களின் கீழ் மேற்கொள்ளப்படும் பணிகள் கிராமப் பகுதிகளில் பெருமளவு வேலை வாய்ப்புகளை உருவாக்கும் வகையில் நன்கு திட்டமிட்டுச் செயற்படுத்தப்படும்என்பதையும்காணலாம்.

சென்னையில் மருத்துவப் பல்கலைக் கழகம் ஒன்றினைத் தொடங்க அரசு கருதியுள்ளது.

உற்பத்தியைப் பெருக்கவும் பொது விநியோக முறையை மும்முரமாகச் செயற்படுத்தவும் அரசு பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொண்ட போதிலும் பதுக்கல், கள்ளச்சந்தை போன்ற ஊகவணிக நடவடிக்கை காரணமாக பொருளாதாரம் பாதிக்கப்படுகிறது. இத்தகைய செயல்களைத் தடுக்கும் நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்தவும் தவறிழைப்போருக்குக் கடுந்தண்டனை விதிக்கவும் அரசு கருதியுள்ளது.

இவ்வாறு அரசு இம் மாநில நல் வாழ்வுக்கான வளர்ச்சி வேகத்தை மேலும் பெருக்கி, சமுதாயத்தில் வறிய, நலிவுற்ற பிரிவினரின் நலனுக்கு இயன்ற அனைத்தையும் செய்ய விரிவான ஆக்கபூர்வமான திட்டங்கள் பலவற்றை தயாரித்துள்ளது. உயர்ந்த இலட்சியமுடைய இத்தகைய திட்டபணிகளில், நீங்கள் ஒருங்கிணைந்து முழு ஒத்துழைப்பைத் தந்து அவை வெற்றிபெற உறுதுணையாக இருக்க வேண்டுமென்று இச்சந்தர்ப்பத்தில் அனைவரையும் நான் கேட்டுக்கொள்கிறேன்.

இவ்வாறு ஆளுநர் குரானா தனது உரையில் தெரிவித்துள்ளார்.

அக்ரோ தலைவர்

# லியாகத் அலிகான் தங்கை திருமணம்

சென்னை, மார்ச். 8- தமிழ்நாடு அக்ரோ இண்டஸ்ட்டிரீஸ் தலைவர் லியாகத் அலிகானின் தங்கை குர்ஷித்பேகத்திற்கும், இனாயத்துல்லாவின்மகன்சிராஜுதீனுக்கும் வரும் 10ந் தேதி ஞாயிற்றுகிழமை காலை 10 மணி அளவில் ராயப்பேட்டை தங்கம்மாள் ஓடை தெருவிலுள்ள திருமண மண்டபத்தில் திருமணம் நடைபெறுகிறது.

இம் மணவிழாவில் அமைச்சர்கள், வாரியத் தலைவர்கள், நாடாளுமன்ற, சட்டமன்ற, மேலவைஉறுப்பினர்களும், கழகத் தோழர்களும் கலந்து கொண்டு மணமக்களை வாழ்த்துகின்றனர்.

# இதற்குப் பொருள் என்னப்பா சொல் ?!

''மாநிலத்திலும் மத்தியிலும் ஒரே கட்சி ஆட்சி'' என்ற கோட்பாட்டைப் பற்றி நாம் விமர்சிக்க இதை எழுதவில்லை.

மத்தியிலாகட்டும், மாநிலங்களிலாகட்டும் தேச ஒற்றுமை பேணி, மக்கள் நலம் காக்கும் நேர்மையான, ஊழலற்ற அரசு அமைய வேண்டும் என்றே மக்கள் விரும்புகிறார்கள்.

ஆந்திரா, கருநாடகா, சிக்கிம் மாநிலத் தேர்தல் முடிவுகளைத் தூக்கிப் பிடித்துக் கொண்டு- ''ஒரே கட்சி ஆட்சி'' கொள்கையை மக்கள் புறக்கணித்தார்கள் என்று மு.ஒலி விவாதிக்கிறது.

அபபடியானால் - 7 மாநிலங்களில் காங்கிரசும் புதுவையில் கழக-இ. காங்கிரஸ் கூட்டணியும் வெற்றி பெற்றிருக்கிறதே.

பெரும்பான்மை மக்கள் இந்தகொள்கையை ஆதரிக்கிறார்கள் என்று வாதாடலாமா?

படுதோல்வியால் துவண்டு போய் - மனசமபல நிலையை இழந்த கருணாநிதி கும்பலின் பிதற்றலைக் கேட்கும்போது-

அழுவதா சிரிப்பதா - என்று புரியவில்லை !

நீங்களே முடிவு செய்யுங்கள் !

- கா

# கருநாடக முதல்வராக ஹெக்டே பதவி ஏற்பு

பெங்களூர், மார்ச் 8- கருநாடக மாநில முதல்வராக ராமகிருஷ்ண ஹெக்டே இன்று மாலை 5 மணிக்கு, மாநில தலைமைச் செயலகம் (விதான் சவுதா) முன்பு பதவி ஏற்கிறார்.

முன்னதாக சட்டமன்ற ஜனதா உறுப்பினர்கள் கூட்டத்தில் ராமகிருஷ்ண ஹெக்டே, கட்சித்தலைவராக ஒருமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டார்.



# இயக்குனர் முத்துராமன் வெளிநாடு பயணம்

சென்னை, மார்ச் 8— திரைப்பட இயக்குனர் எஸ்.பி.முத்துராமன்வரும் 10ந்தேதிஜப்பான், ஹாங்காங், மலேசியா. சிங்கப்பூர் போன்ற நாடுகளில் பயணம் செய்வதற்காக சென்னையிலிருந்து புறப்படுகிறார். இந்த நாடுகளில் பல்வேறு இடங்களில் தனது தொழில் தொடர்பாக ஒரு வார காலத்திற்கு மேல் சுற்றிப் பார்த்து விட்டுஇயக்குனர் முத்துராமன் சென்னை திரும்புகிறார்.

## ஏலவிற்பனை

1. R. Ashok & Co. No. 34-A/3 M. G. R. Road, Madras-61 (24-8-82 முதல் 30-9-83 வரை) ஏலத்தேதி 23-3-85 அன்று காலை 10 மணிக்கு

மேற்படியார் கடையில் அடகு வைத்துள்ள பொன், பொன் அல்லாத பொருட்களை வருவாய்த்துறை அதிகார்கள் முன்பு அரசு அங்கிகாரம் பெற்ற ஏலத்தாரர் M. தரம்சந்த் ஜெயின், மேற்குறிப்பிட்ட ஏலத்தேதியில் மேற்குறிப்பிட்ட கடையில் வருவாய்த்துறை அதிகாரிகள் முன்னிலையில் ஏலமி போடுவார்.

# மூடிக்கிடக்கும் ஆலைத் தொழிலாளர்கட்கு அரசு உதவி

கோவை. மார்ச் 8— மூடிக்கிடக்கும் கோவை காளப்பட்டி பத்மா ஆலைத் தொழிலாளர்கள் 155 பேர்களுக்கு தலா ரூ.200- 1-3-85ந தேதி வழங்கப்பட்டது.கோவை மாவட்ட பஞ்சாலை அண்ணா தொழிலாளர் சங்கத்தின் கோரிக்கையை ஏற்று ஆவன செய்த முதல்வர் புரட்சித் தலைவருக்கும், தொழிலாளர் நல அமைச்சர் கே.ஏ.கேவுக்கும், பேரவைபொதுச் செயலாளர் வை. பெருமாளுக்கும், மற்றும்தொழிலாளர்துறைஅதிகாரிக்கும் கோவை மாவட்ட பஞ்சாலை அண்ணா தொழிலாளர்சங்கத்தின்சார்பாக நன்றியை சங்கத்தின் பொதுச் செயலாளர் நா. கருப்பு சாமியும், பொருளாளர். வே. க. தனகோ பாலனும் தெரிவித்துள்ளார்கள்.

# 25 ஆயிரம் முட்டைகள் எங்கே? ஊழியர் நீக்கம்

காஞ்சிபுரம். மார்ச் 8- தமிழ்நாடு கோழி வளர்ப்பு நிறுவனத்தலைவர் கல்யாணி ராமசாமி காஞ்சிபுரத்தில் உள்ள டாப்கோவின் முட்டை விற்பனை சாகத்தை முன் அறிவிப்பின்றி பார்வையிட்டார். சாகத்தில்முட்டைகடைகுள் ஆய்வு செய்யப்பட்டபோது 25 ஆயிரத்து 215 முட்டைகள் குறைந்திருந்தன. இந்த கையாடல் சம்பந்தமாக சரகத்தின் விற்பனை உதவியாளர் வேலை நீக்கம்செய்யப்பட்டார்.

# தேர்தல் முடிவுகள் இறுதி நிலவரம்

| | |
|---|---|
| **உத்தரப்பிரதேசம்** | |
| மொத்தத் தொகுதிகள் | 425 |
| முடிவு தெரிந்தவை | 422 |
| இ. காங்கிரஸ் | 265 |
| சரண்சிங் கட்சி | 86 |
| பாரதீய ஜனதா | 16 |
| ஜனதா | 18 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 5 |
| மார்க்சிஸ்ட் | 3 |
| காங்கிரஸ் (ஜெ) | 4 |
| சுயேச்சைகள் | 23 |
| (3 தொகுதிகளில் தேர்தல் நடைபெறவில்லை) | |
| **ஆந்திரா** | |
| மொத்த இடங்கள் | 292 |
| முடிவு தெரிந்தவை | 291 |
| தெலுங்கு தேசம் | 202 |
| இ. காங்கிரஸ் | 49 |
| மார்க்சிஸ்ட் | 11 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 11 |
| பாரதீய ஜனதா | 8 |
| முஸ்லிம் மஜ்லிஸ் | 3 |
| ஜனதா | 2 |
| சுயேச்சை | 5 |
| **மராட்டியம்** | |
| மொத்தத்தொகுதிகள் | 288 |
| முடிவு தெரிந்தவை | 288 |
| இ. காங்கிரஸ் | 162 |
| காங்கிரஸ் (எஸ்) | 54 |
| பாரதீய ஜனதா | 16 |
| ஜனதா | 20 |
| பி.டபிள்யூ-பி- | 13 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 2 |
| மார்க்சிஸ்ட் | 2 |
| சுயேச்சை | 19 |
| **குஜராத்** | |
| மொத்த தொகுதிகள் | 182 |
| முடிவு தெரிந்தவை | 182 |
| இ. காங்கிரஸ் | 149 |

| | |
|---|---|
| பாரதீய ஜனதா | 11 |
| ஜனதா | 14 |
| சுயேச்சைகள் | 8 |
| **சிக்கிம்** | |
| மொத்த இடங்கள் | 32 |
| முடிவு தெரிந்தவை | 32 |
| சிக்கிம் சங்க்ராம்பரிஷத் | 30 |
| இ. காங்கிரஸ் | 1 |
| சுயேச்சை | 1 |
| **ராஜஸ்தான்** | |
| மொத்த இடங்கள் | 200 |
| முடிவு தெரிந்தவை | 198 |
| இ. காங்கிரஸ் | 113 |
| பாரதீய ஜனதா | 36 |
| சரண்சிங் கட்சி | 29 |
| ஜனதா | 10 |
| மார்க்சிஸ்ட் | 7 |
| சுயேச்சை | 9 |
| (இரு தொகுதிகளில் தேர்தல் நடைபெறவில்லை.) | |
| **இமாசலப்பிரதேசம்** | |
| மொத்தத்தொகுதிகள் | 68 |
| தேர்தல் நடந்தவை | 65 |
| முடிவு தெரிந்தவை | 65 |
| இ. காங்கிரஸ் | 55 |
| பாரதீய ஜனதா | 7 |
| சரண்சிங் கட்சி | 1 |
| சுயேச்சை | 2 |
| **பீகார்** | |
| மொத்த இடங்கள் | 324 |
| முடிவு தெரிந்தவை | 282 |
| இ. காங்கிரஸ் | 183 |
| சரண்சிங் கட்சி | 38 |
| ஜனதா | 11 |
| பாரதீய ஜனதா | 11 |
| இந்திய கம்யூனிஸ்ட் | 11 |
| மார்க்சிஸ்ட் | 0 |
| காங்கிரஸ் (எஸ்) | 1 |
| இதர கட்சிகள் | |
| சுயேச்சைகள் | 27 |





Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras-29

# கூட்டுறவு வங்கியில் 1 பவுன் நகைக்கு ரூ1000 கடன் பெறலாம்

## அமைச்சர்சாத்தூர்ராமச்சந்திரன்அறிவிப்பு

மதுரை, மார்ச். 8- கூட்டுறவு வங்கியில் 1 பவுன் நகைக்கு தற்போது ரூ. 850 என்ற அளவில் வழங்கப்படும். கடன்தொகை இனி ரூ. 1000 ஆக உயர்த்தப்படுமென்று அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் கூறினார்.

கூட்டுறவு நகர வங்கிகள் வெறும் வட்டிகடைகளாக இல்லாமல் ஏழைகளுக்கு உதவி செய்யும் சீரிய எண்ணத்துடன் செயல்பட வேண்டும் என்று கூட்டுறவுத் துறை அமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் வேண்டுகோள் விடுத்தார் மதுரையில் இன்று காலை நடைபெற்ற கூட்டுறவு வங்கிகளின்மண்டல கருத்தரங்கில் சிறப்புரையாற்றி பேசுகையில்அவர் கூறியதாவது:-

ஏழை, எளிய மக்களுக்கு உதவுவதற்கும் நல்ல முன்னேற்றமான திட்டங்களை தீட்டுவதற்காகவும் உற்பத்தியினை பெருக்குவதற்கானசீரியமுயற்சியில் நகரவங்கிகள்பெருமளவில் பங்கு கொள்ளவும் இந்த கருத்தரங்கு நடைபெறுகிறது.



வாளர் சந்தானம்அமைச்சர் ராமச்சந்திரனிடம் வழங்கினார். இணைப் பதிவாளர் துரைசாமி நன்றி உரையாற்றினார்.

### சிறுதொழிலுக்கு உதவிகள்

தென் மாவட்டங்களின் கூட்டுறவு நகர வங்கிகளின் பிரதிநிதிகள் இங்கே கூடியுள்ளீர்கள். புரட்சித் தலைவரின் தமிழக அரசு இந்த நாட்டிலுள்ள நடுத்தர மக்களுக்கு ஏழைகளுக்கு, சிறு வியாபாரம் செய்வோருக்கு, சிறு தொழில் நடத்தி வருமானம் பெருக்க உதவி செய்ய தங்களை அர்ப்பணித்து கொண்டிருக்கிறது.

தமிழகம் பெருவளமான துறைகளில் இந்தியாவில் முன்னணியில் இருக்கிறது புரட்சித்தலைவரின் சத்துணவு திட்டம் உலகளவில் பாராட்டப்பெற்றுள்ளது. கூட்டுறவுத் துறையிலும் முன்னணியில் இருக்கின்றது. விவசாயிகளுக்கு கடன் வழங்கும் கூட்டுறவுத் துறையானாலும் அல்லது நுகர்வோர் கூட்டுறவுத் துறையானாலும் சரி பிற மாநிலங்கள் நம்மைப் பார்த்து திட்டங்கள் தீட்டுகின்றன.

### தமிழகம் முன்னணி

குறிப்பாக இந்தியாவில் விற்கும் நுகர் பொருள் விற்பனையில் தமிழ் நாட்டில் உள்ள மொத்த கூட்டுறவு பண்டகசாலைகள் மூன்றில் ஒரு பங்கை விற்பனை செய்கின்றன.

இங்கே தலைமை உரை ஆற்றிய முனுஆதி அவர்கள் விவசாயிகளுக்கு பயிர் கடன் வழங்க வேண்டும் என்றும் கூட்டுறவுத் துறையில் சீர்திருத்தங்கள் செய்ய வேண்டும் என்றும் குறிப்பிட்டார். அவர் கூறியவற்றை நிச்சயம் செய்ய எல்லா நடவடிக்கைகளையும் அரசு செய்யும்.

கூட்டுறவு நகர வங்கிகளில் நகை கடன் பவுன் ஒன்றுக்கு ரூ.850என்றுஇருக்கிறது. இதுஇனி ரூ.1,000 ஆக உயர்த்தப்படும்.

தமிழ்நாட்டில் உள்ள 93 கூட்டுறவு நகர வங்கிகள் 1984 - 85 ஆம் ஆண்டிற்கு சிறு தொழில்களுக்கு ரூ. 186.75லட்சம் ஜனவரி வரை வழங்கப்பட்டுள்ளது என்றுஅமைச்சர் சாத்தூர் ராமச்சந்திரன் கூறினார். இந்த கருத்தரங்கிற்கு விவசாய உயர்மட்டக்குழு தலைவர் முனுஆதி தலைமை வகித்தார்.

கூட்டுறவு வங்கிகளின் பதிவாளர்ஆர்.சந்தானம் வாழ்த்துரை வழங்கினார். இந்திய ரிசர்வ் வங்கி இணை முதன்மை அலுவலர் எம். பிச்சை துவக்க உரையாற்றினார் கூட்டுறவு வங்கிகளின் தலைவர் சுப்பையா வரவேற்புரை நிகழ்த்தினார்.

இவ்விழாவில் முதலமைச்சர் சத்துணவு திட்டத்துக்கு ரூ 76,000க்கான காசோலையை பதி

# சண்டிகார் அதிகாரிக்கு வி. ஜி. பி. பாராட்டு

சென்னை. மார்ச் 8- சண்டிகார் தொழில் துறை இயக்குனர் டி. சி. சங்கலாவுக்கு இன்று (8 ந்தேதி) தங்களது தங்கக் கடற்கரையில் வி. ஜி பி. நிறுவனத்தார் பாராட்டு விழா நடத்துகின்றனர்.

சென்னை நகர ஷெரீப் முகமது அப்துல் அலி தலைமையில் நடைபெறும் இந்த பாராட்டு விழாவில் பல பிரமுகர்கள் பங்கேற்றுப் பேசுகின்றனர்.

# கஸ்டம்ஸ் அதிகாரிகள் துப்பாக்கிச்சூடு

நாகை, மார்ச் 8- நாகையை அடுத்த நாகூரில் கஸ்டம்ஸ் அதிகாரிகள் ஒரு கடையில் சோதனை நடத்திய போது வன்முறைக்கும்பல் ஒன்றுஅவர்களை சூழ்ந்து கொண்டது.

இதையடுத்து கஸ்டம்ஸ் அதிகாரிகள் சுட்டதில் இருவர் காயமடைந்தனர்.

காயமடைந்தவர்கள் பின்னர் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு சிகிச்சைபெற்றுவருகிறார்கள்.

# இலங்கை தமிழர்கட்கு ஒன்றுபட்டு உதவ ரெக்ஸ் வேண்டுகோள்

சென்னை, மார்ச் 8- இலங்கையிலிருந்து அகதிகளாக வரும் தமிழர்களுக்கு அரசு மட்டுமின்றி சமூக சேவை நிறுவனங்களும், மத அமைப்புகளும், மாணவர்களும் ஒன்றுபட்டு உதவ வேண்டுமென்று சென்னை நகர முன்னாள் ஷெரீப் டாக்டர் ரெக்ஸ் வேண்டுகோள் விடுத்துள்ளார்.

டாக்டர் ரெக்ஸ் அறிக்கை விவரம்வருமாறு:-

இலங்கைத் தமிழர்கள் வெங்கொடுமைச் சாக்காட்டில் வீழ்ந்துபட்டு, அகதிகளாக, ஆயிரக்கணக்கில். தாங்கள் பல்லாண்டுகளாகப் பாடுபட்டுச் சேர்த்து வைத்த சொத்து சுகங்களையெல்லாம் இழந்துவிட்டு தமிழ்நாட்டில் தஞ்சம் புகுந்து வருகின்ற வேதனையான காட்சி, கடந்த சிலவாரங்களாகத் தொடர்ந்து நடைபெற்றுக்கொண்டு வருகிறது. தமிழன்என்றஇனஉணர்வு கொண்ட ஒவ்வொருவருடையஇதயமும்இதைப் பார்த்து இன்று வேதனைக் கண்ணீர் உகுத்துக் கொண்டிருக்கின்றது.



### புது வாழ்வு

தமிழக முதல்வர் டாக்டர் புரட்சித்தலைவர் போர்க்கால நடவடிக்கை போல, வந்து சேரும் அகதிகளுக்குப் புகலிடம் அளித்து புதுவாழ்வு நல்க அனைத்து முயற்சிகளையும் ஆர்ப்பாட்டமின்றி செய்து வருவதையும், மத்திய அரசும், இந்தப் பிரச்சினையை இந்தியநாடு தழுவிய ஒரு பிரச்சினையாக ஏற்றுக் கொண்டு நடவடிக்கைகள் எடுத்து வருவதையும் நல்ல மனம்படைத்தோர் மறுக்க முடியாது.

"இலங்கைக்கு ராணுவம் அனுப்ப வேண்டும்" என்று சொல்வதிலேயே தமிழ்ச் சமுதாயத்தின் கடமை நின்றுவிட முடியாது. அரசு மட்டுமே அகதிகள் பிரச்சினைகளை முழுக்க ஏற்று நடத்த வேண்டும் என்ற மெத்தனத்தில் நாம் இருப்பது, நம் கடமையைத் தட்டிக்கழிப்பது என்ற பழிக்கு நம்மையே நாம் ஆட்படுத்திகொள்ளுவதாகும்.

ஆகவே, நம் சொந்த உதிரங்கள், கண்ணீர்சிந்தி நம் காலடி தேடி ஓடிவரும் இந்த நேரத்தில் தமிழகத்தில் உள்ளபல்வேறு மத நிறுவனங்கள், இந்து சமய கிறிஸ்தவ, இஸ்லாமிய அறக்கட்டளைகள் ஒன்றுபட்டு இலங்கை அகதிகளுக்குத் தங்கள் பங்கை உடனடியாக நிறை

வேற்றமுன் வரவேண்டும்.

தமிழகத்தின் எண்ணற்ற சமூக அமைப்புக்கள், அனாதை இல்லங்கள் தங்கள் வசதி வாய்ப்புக்களுக்கேற்ப, இலங்கை அகதிகளுக்கு தங்கள் கடமையை ஆற்றுவது இன்றைய அவசர அவசியத் தேவை ஆகும்.

### கல்வி நிலையங்கள்

ஆயிரமாயிரம் கல்வி நிலையங்கள் தமிழகத்தில் உள்ளன. ஒவ்வொருகல்வி நிலையமும் ரூ. 1/ ரூ. 5/- ரூ. 10/- இலங்கை அகதிகள் நல்வாழ்வுச் சீட்டுக்கள் அச்சிட்டு மாணவர்கள் மூலம் விற்று நிதி திரட்டவேண்டும்.

சமூகசேவையாளர்கள், தமிழகத்தின் ஒவ்வொரு வீதிவீதியாக, இருகரம் நீட்டி, இலங்கை அகதிகளுக்கு உடை, மற்றும் அத்தியாவசியப் பொருட்களைத் திரட்டிச் சேர்த்து உதவ முன்வருதல் வேண்டும்.

இத்தகைய சீரிய செயல்முறைகளே, திக்கற்ற நம் இலங்கைத் தமிழர்களுக்கு காலத்தால் நாம் செய்யும் உதவியாகும்.

இத்தகைய சேவைகள், இலங்கைத் தமிழர்களின் தேவைகளை நிறைவு செய்வதோடுமட்டுமல்லாமல், தமிழ்ச் சமுதாயம் தங்கள் பின்னே அணிவகுத்து நிற்கின்றதுஎன்ற உணர்வையும், தெம்பினையும் அவர்களுக்கு வழங்கும் என்பது உறுதி.

தமிழர் சமுதாயம், 'கூட்டத்தில் கூடி நின்று கூடிப் பிதற்றலல்லால் நாட்டத்தில்கொள்ளாரடி கிளியே' என்ற பாரதியின் கவிதைக்குரிய கேலிப் பொருளாக இனியும் இல்லாமல், உடனடியாக செயல்படப் பணிவன்போடு வேண்டுகின்றேன்.

மாணவர் சமுதாயம் இந்தப்பணியை முன்னின்று செய்யுமாறு அவர்கள் தாள் பணிந்து கேட்டுக் கொள்கிறேன்.

இவ்வாறு டாக்டர் ரெக்ஸ் கூறியுள்ளார்.

# பட்டியலை பாதுகாப்பீர்!

புதுவை மாநிலத் தேர்தல் பற்றி ஊழலின் ஊதுகுழலான மு ஒலி - 'போஸ்ட் மார்ட்டம்' செய்திருக்கிறது.

மொத்த வாக்கு, சதவீதம் என்றெல்லாம் ஏகப் புலம்பல்.

'மரணமடைந்தார்' - 'இயற்கை எய்தினார்' - 'காலமானார்' - 'சிவலோகப் ப்ராப்தி அடைந்தார்'- 'வைகுண்ட பதவி அடைந்தார்' - 'கர்த்தருக்குள் நித்திரையானார்' - இப்படி அவரவர் வழக்கப்படி ஆயிரம் முறைகளில் சொன்னாலும்- 'உயிர் பிரிந்துவிட்டது' என்று தான் பொருள்.

கருணாநிதி கும்பல் எஞ்சியிருக்கும் தொண்டர்களை ஏமாற்ற எத்தனை வழிகளில் முயன்றாலும்-

புதுவையில் கருணாநிதி கும்பல் அடைந்த படுதோல்வியைமறைக்க முடியாது!

தோல்வியை மறைக்க முயற்சிக்கும் இப்பட்டியல்களை மு. ஒலி நிரந்தரமாக வைத்துக் கொள்ளட்டும்.

ஏனெனில் அவர்களுக்கு எப்போதும் தோல்வியே!

-கா

8-ம் பத்தி தொடர்ச்சி

கோடி மதிப்பீட்டில் பட்டு நூற்பு பட்டு நூல் முறுக்கேற்றல், பட்டுத் துணி நெசவு செய்தல் ஆகியவற்றை ஏற்படுத்த திட்டம் தயாரிக்கப்பட்டுள்ளது. மாநில மற்றும் மத்திய அரசில் சம்பந்தப்பட்டஅலுவலர்கள்மற்றும் அமைச்சர்களுடன் கலந்து பேசி விரைவில் பட்டுத் தொழில் மையம் இம் மாவட்டத்தில்ஏற்படுத்த உரிய நடவடிக்கை எடுப்பேன்.

### பாசன வசதி

இம்மாவட்டத்தில் 34 சதவீத நிலங்கள் காட்டுப் பகுதியாக உள்ளன. மழைக்காலங்களில் காட்டுப்பகுதியில் விழும் மழை நீர் காட்டாறு, சிற்றோடைவழி ஓடி வீணாகிறது. இவ்வாறு வீணாகும் நீரை தேக்கி வைக்க சிறுஅணைகள், கசிவு நீர்குட்டைகள் போன்றவற்றை அமைக்கலாம். இதன்மூலம் பொது மக்களின் குடிநீர்ப் பிரச்சினை தீர்க்கப்படுவதோடு, நேரடிப் பாசன வசதியும், அதோடு அருகில் உள்ள கிணறுகளில் தண்ணீர் மட்டம் உயரவும் வாய்ப்புள்ளது. இதையெல்லாம் விட எதிர்காலத்தில் பெரிய பெரிய தொழிற்சாலைகள் தோன்றுவதற்கு அடிப்படைத் தேவையான தண்ணீரைத்தேக்கி வைக்க பெரிய வாய்ப்பாக உள்ளது.

6-ம் பத்தி தொடர்ச்சி

பண்டாரி மாநில கவர்னர் கோனா பிரபாகர ராவை சந்தித்தார்.

புதிய அமைச்சரவை நாளை பதவி ஏற்கும் எனத் தெரிகிறது.

இதில் சம்பந்தப்பட்ட அதிகாரிகளுடன் கலந்து பேசியதில் மத்திய அரசின் காட்டு இலாகாவின் அனுமதி கிடைப்பதில் கால தாமதம் ஏற்படுகிறது என்று கூறினார்கள். இது சம்பந்தமான விவரங்களை கேட்டு இருக்கிறேன். டெல்லியில்உரிய அதிகாரிகளிடம் எடுத்துக் கூறி உரிய அனுமதிகளை பெற்றுத்தர முயற்சிப்பேன்.

### ஆதிதிராவிடர் மேம்பாட்டுக்கு உழைப்பேன்

கடத்தூருக்கு அருகில் உள்ள ஒபுலி நாய்க்கன்ஏரி மற்றும் தொட்ட அள்ளி அணைக்கட்டு போன்ற திட்டங்களை உரிய முறையில் ஆய்வு செய்து திட்ட மதிப்பீடுகள் தயார் செய்யுமாறு பொறியாளர்களைக் கேட்டுக்கொண்டுள்ளேன்.

இம்மாவட்டத்தில் குடிநீர் தட்டுப்பாட்டை போக்க அதிக அளவு நிதி பெற்றுத் தர உரிய அலுவலர்களுடன் கலந்துபேசி முயற்சிமேற்கொள்வேன். பழங்குடியினர் மேம்பாட்டு திட்டத்தின் கீழ் மலைப்பகுதி சாலைகள் அதிகம் ஏற்படுத்த மத்திய அரசிடம்நிதிஉதவிபெற்றுதர முயற்சிப்பேன்.

ஆதி திராவிடர் குடியிருப்புகள் அதிகம் ஏற்படுத்தி தரவும், பழைய சாலைகளை புதுப்பிக்கவும், அதிக அளவில் புதிய சாலைகள் உருவாக்கவும் முயற்சி மேற்கொள்வேன்.

இவ்வாறு நாடாளுமன்ற துணைசபாநாயகர் தம்பித்துரை கூறினார்.

ராயபுரத்தில்

# நன்றி அறிவிப்பு கூட்டம்

சென்னை, மார்ச் 8- சென்னை ராயபுரம் பொன்மனச் செம்மல் எம்.ஜி.ஆர். மன்றத்தின் சார்பில் நன்றி அறிவிப்பு கூட்டம் இன்று மாலை 7 மணி அளவில் 11-வதுவட்டத்தில் நடைபெறுகிறது. வாசு தலைமையில்நடைபெறும் இக் கூட்டத்தில் அமைச்சர்கள் சவுந்திரராஜன், கோவேந்தன், மதுசூதனன் எம்.எல்.சி. சேலம் ரஹீம், சோமசுந்தரம், பொன்ராஜ், சகாயராஜ் மற்றும் பலர் பேசுகின்றனர். முன்னதாக ஜானி கலா நிகழ்ச்சி நடைபெறுகிறது.

# சிக்கிம்: பண்டாரி முதல்வராகிறார்

காங்டாக், மார்ச் 8— சிக்கிம் மாநிலத்தில், அமோக வெற்றி பெற்றுள்ள சிக்கிம் சங்க்ராம் பரிஷத் கட்சியின் சட்டமன்ற உறுப்பினர்கள் சட்டமன்றக்கட்சித் தலைவராக நார்பந்து பண்டாரியைத் தேர்ந்தெடுத்தனர்.

அதனையடுத்து

5-ம் பத்தி பார்க்க

தருமபுரியில்

# பட்டுத்தொழில் மையம் அமைய பாடுபடுவேன

## நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை உறுதி

தருமபுரி, மார்ச் 8- தருமபுரியில்பட்டுத் தொழில் மையம் உருவாக முயற்சி எடுப்பேன் என்று நாடாளுமன்ற துணை சபாநாயகர் தம்பித்துரை உறுதி கூறினார்.

தருமபுரிக்குவருகைதந்த நாடாளுமன்ற துணை சபாநாயகர் மு. தம்பித்துரை குடிநீர், சாலை, மின்சாரம் நீர்பாசனம் சம்பந்தப்பட்ட பொறியாளர்களுடன் தருமபுரி மாவட்ட வளர்ச்சிப் பணிகள் குறித்து ஆலோசனை நடத்தியபின் செய்தியாளர்களிடம் கூறியதாவது:-

தருமபுரி மாவட்டத்தில்அதிக அளவில் 16 ஆயிரம் ஏக்கரில் மல்பரி சாகுபடி செய்யப்பட்டுள்ளது. எனவே மாவட்டத்தில் பட்டுத் தொழில்



மையம் அவசியமாகிறது. இம்மாவட்டத்தில் ரூ. 1

4-ம் பத்தி பார்க்க